# செந்தமிழ்ச் செல்வி

உள்ளுறை





சிலம்பு-௪௬] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௩, வைகாசி (June'72) [பரல்-௧௦

## 'செந்தமிழ்ச் செல்வி'

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---

உ

# சிவ சிவ சிவ சிவ சிவ சிவ



திருவருளிற் கலந்த காசிவாசி

அருட்டிரு அருள்நந்தித் தம்பிரான் அடிகள்

தோற்றம்:
13-9-1899

மறைவு:
18-5-1972

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦௩, வைகாசி | பரல் |
| --- | --- | --- |
| ௪௬ | சூன் 1972 | ௧௦ |


## படந் தொகுத்தலிற் பட்டறிவு

க

தெய்வத் திருவுருவங்கள், திருக்கோயில்கள், முனிவர்கள், சமயத் தலைவர்கள், தமிழ்ப் புலவர்கள், அறிவியலறிஞர்கள், அரசியற்றலைவர்கள், மற்றும் பலதுறைப் பெருமக்கள் ஆகியோர் படங்களைத் தொகுத்தலில் எடுத்துக்கொண்ட பெருமுயற்சியினையும், பெற்ற பயனையும், பெறுதலிற் கண்ட இழப்பினையும் மக்களிடங் காணுங் கருத்தின்மையினையும் இக் கட்டுரையில் விளக்குகின்றேன்.

படங்களைத் தொகுப்பதற்குச் சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகத்துக்கு ஏற்பட்ட சிறந்த சில வாயில்களில் அதன் அமைப்பும் ஒன்றாகும். எனவே அதனை முதற்கண் தெரிந்துகொள்ளுதல் இன்றியமையாததாகும்.

### கழக அமைப்பு

தமிழ் வளர்ச்சிக்கும் சமய வளர்ச்சிக்கும் தொண்டு செய்வதே தனிப்பெரு நோக்கமாகக் கொண்டு சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் திருநெல்வேலியில் 1920 செப்டம்பர்த் திங்கள் மட்டிட்ட கூட்டுப் பங்கு நிறுவன (Public Limited Company) மாகப் பதிவு செய்து நிறுவப் பெற்றது. செந்தமிழ் இலக்கண இலக்கியங்கள், சைவசமய நூல்கள், தமிழ் தமிழர் தமிழ்நாட்டு வரலாறுகள், கதைகள், நாடகங்கள், அறிவியல் நூல்கள் முதலிய பலதுறை நூல்களைத் தமிழிலும் ஆங்கிலத் திலும் கழகம் அச்சிட்டு விற்று அதனால் கிடைக்கப்பெறும்

செலவு நீக்கிய வருவாயில் பேர்பாதியை ஆண்டுதோறும் அதன் அறநிலையங்களாகிய தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்கும் தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்திற்கும் பிரித்துக் கொடுத்து வரும். கழகத்துக்கு எத்துணை ஊதியம் கிடைக்கப்பெறினும் பங்காளிகட்கு நூற்றுக்கு ஆறு விழுக்காட்டிற்கு மேல் பங்கூதியம் பெற உரிமையில்லை. மேலும் கழகப்பணி நிறுத்தப் பெறின் அதன் உடைமைகள் யாவும் அறநிலையங்களுக்கே உரியனவாகும். அறநிலையங்களாகிய தமிழ்ச் சங்கமும் சைவசித்தாந்த சங்கமும் (Societies Registration Act, xxi of 1860.) சங்கப் பதிவுச் சட்டப்படி பதிவு செய்யப் பெற்றுள்ளன.

அறநிலையங்களைக் குறிக்கோளாகக் கொண்டு திட்டமான வருவாயினை எதிர்பார்க்க முடியாத நூற்பதிப்புக் கழகத்தை நிறுவத் தொடங்கியதன் துணிபு அறிவுசான்ற சிலர்க்கு வியப்பையும் ஐயுறவையுமே உண்டாக்கின. எனவே கழகத்திலே பங்குகள் எடுப்பதற்கும் அவர்கள் தயங்கினர். இப்போது கழகம் தொடங்கி 52 ஆண்டுகளில் 1450 அருந்தமிழ் நூல்களை வெளியிட்டும், பல மாநாடுகளை நடத்தியும், சென்னையில் ஆராய்ச்சியாளர்க்குப் பயன்படும் வகையில் மறைமலையடிகள் நூல் நிலையத்தையும், நெல்லையில் சிவஞான முனிவர் நூல் நிலையத்தையும், பல்லவபுரத்தில் மறைமலை யடிகள் கலை மன்றத்தையும், நெல்லையில் திருவள்ளுவர் புலவர் கல்லூரியையும், குமரகுருபரர் குழந்தைப் பள்ளியையும் சீரும் சிறப்புமாக நடத்தியும் வருதலைக் கண்டு முதற்கண் ஐயுற்ற பெருமக்கள் இப்போது வியப்புறுகின்றனர்.

பிற பெருந்தொழில் கூட்டுப்பங்கு நிறுவனங்களெல்லாம் அறச் செயல்களை முன்வைத்து அவற்றிற்காக நிறுவப்பெற்றனவல்ல. தொழிலால் பேரூதியம் கிடைக்கப்பெற்ற பின்னரே அறநிலையங்களை அவை நிறுவுகின்றனவென்பதைக் கண்டு வருகின்றோம். இவ் வேறுபாட்டினைத் தமிழ்மக்கள் ஒவ்வொருவரும் நன்கு புரிந்துகொள்ளுதல் வேண்டும்.

கழகத்தின் அறநிலையங்களாகிய நூல் நிலையங்களையும், கலை மன்றத்தையும் விரிவுபடுத்தி நடத்துவதற்குத் தமிழகத்திலுள்ள அறப் பண்புடையவர்கள் தாராளமாகப் பொருளுதவி செய்யலாம். அதனால் கழகப் பங்காளிகட்கு எள்ளளவேனும் ஊதிய உயர்வு கிடையாதென்பதை ஒவ்வொருவரும் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

அறக் கொள்கைகளையே முதன்மையாகக் கொண்ட கழகம் ஆதலால் படந் தொகுத்தலிலும் கருத்துச் செலுத்து வதற்கு அது சிறந்த பெரும்வாயிலாக அமைந்துள்ளது என்பது தெளிவாகின்றதன்றோ!

### செந்தமிழ்ச் செல்வி—திங்களிதழ்

1924 ஆம் ஆண்டில் தொடங்கி இன்றுகாறும் இடையறவு படாமல் கழகம் நடத்திவருந் திங்கள் வெளியீடாகிய செந்தமிழ்ச் செல்வி படந்தொகுப்பதற்குச் சிறந்த வாயிலாக அமைந்திருக்கின்றது.

### சொற்பொழிவு நூல்கள்

சங்க இலக்கியச் சொற்பொழிவு நூல்கள், சிற்றிலக்கியச் சொற்பொழிவு நூல்கள், தமிழக வரலாற்றுச் சொற்பொழிவு நூல், அரசியல் அறிவுச் சொற்பொழிவு நூல், பெரியபுராணச் சொற்பொழிவு நூல் ஆகியவற்றை மாநாடுகள் நடத்தி வெளி யிட்டதும் படந் தொகுப்பதற்கு வாயிலாக அமைந்துள்ளது.

### பெருந்திரட்டு நூல்களும், வரலாற்று நூல்களும்

பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு, திருவருட்பாப் பெருந்திரட்டு, விடுதலை வீரர் ஐவர், தமிழ்ப் புலவர்களின் வரலாறுகள், அரசியல் தலைவர்களின் வரலாறுகள், அறிவியற் புலவர்களின் வரலாறுகள் முதலியவற்றை வெளியிடு முகத்தான் படந் தொகுப்பதற்கு வாயில் ஏற்பட்டது.

### விழா மலர்கள்

1008 ஆவது வெளியீட்டு விழா மலரும், கழகத் திருவள் ளுவர் விழா மலரும், கழகப் பொன்விழா மலரும் படந் தொகுப் பதற்கு வாயிலாக அமைந்துள்ளன.

### பெரும் புகழ்பெற்ற மூவர் பிரிவுபற்றிய நூல்கள்

இந்தியாவின் அடிமைத் தளையினை நீக்கி உரிமை வாங்கிக் கொடுத்துப் பெரும் புகழொடு மறைந்த காந்தியடிகள், விடுதலைக் குழைத்து, விடுதலை பெற்றபின் இந்திய முதலமைச்சராக 17 ஆண்டுகள் புகழ்பெற ஆட்சி செய்து மறைந்த பண்டித சவகாலால் நேரு, தமிழ்மொழிக் கேற்பட்ட தீங்கினை நீக்கவும், தமிழ் மக்கள் முன்னேற்றத்துக்குத் திட்டங்கள் வகுக்கவும்

முயன்று தமிழகவரசைக் கைப்பற்றி அதன் முதலமைச்சராக இரண்டாண்டுக் காலம் வீற்றிருந்து புகழொடு மறைந்த சி. என். அண்ணுதுரை ஆகிய மூவரும் பிரிந்தவுடன் உலகப் பெருமக்களும், அரசியல் தலைவர்களும், தமிழ்ப் புலவர்களும் வரைந்தனுப்பிய இரங்கலுரை இரங்கற் பாக்களைத் தொகுத்து முறையே 'உரிமையின் பரிசு', 'உலகப் பேரொளி', 'தமிழ்ப் பேரொளி' என்ற தலைப்புக்களில் வெளியிடப்பெற்ற மூன்று நூல்களும் படந்தொகுப்பதற்குச் சிறந்த வாயில்களாகவுள்ளன.

**மறைமலையடிகள் நினைவு விழாக்கள், நூல் வெளியீட்டு விழாக்கள்**

மறைமலையடிகள் நினைவு விழாக்களும், நூல் வெளியீட்டு விழாக்களும், கழகக் கட்டிடத் திறப்பு விழாக்களும், தமிழ்ப் பெரும்புலவர் விழாக்களும் இவை போன்ற பிற விழாக்களும் படந் தொகுப்பதற்கு வாயில்களாகவுள்ளன.

**நூல் நிலையங்கள், குழந்தைப் பள்ளி, புலவர் கல்லூரி**

மறைமலையடிகள் நூல் நிலையமும், சிவஞான முனிவர் நூல் நிலையமும், மறைமலையடிகள் கலைமன்றமும், குமரகுருபரர் குழந்தைப் பள்ளியும், திருவள்ளுவர் புலவர் கல்லூரியும் படந் தொகுப்பதற்கு வாயில்களாக அமைந்துள்ளன.

**கழகத்தின் பலதுறை வெளியீடுகள்**

கழகம் இதுகாறும் அச்சிட்டு வெளியிட்டுள்ள பல துறை நூல்களும் படந் தொகுப்பதற்கு வாயில்களாக அமைந்தன.

**படப்பிடிப்புத் திறன்மிக்க என் உறவினர் மூவர்**

என் மூத்த மருகரும் கழகப் பொது மேலாளருமான திரு இரா. கலியாண சுந்தரம் (பி. எஸ்ஸி), என் இளைய மருகரும், மறைமலையடிகள் நூல்நிலையத்தின் நூலகருமான திரு இரா. முத்துக் குமாரசாமி, (எம் ஏ., பி. லிப்), என் நெருங்கிய உறவினரும், மகனும், ரிசர்வ் பாங்கு அலுவலருமான திரு அ. சண்முகம் (பி. எஸ்ஸி) ஆகிய மூவரும் படப் பிடிப்புத் திறனைக் கைவரப் பெற்றவர்களாக அமைந்துள்ளமை.

மேலே குறிப்பிட்ட வாயில்கள் ஒவ்வொன்றும் பின்னர்த் தனித்தனியே விரித்து எழுதப்பெறும்.

**அமைச்சர் வ. திருவரங்கனார்**

கழகத்தை நிறுவிய என் தமையனாரும் கழக அமைச்சரு மான திரு வ. திருவரங்கனார் படந் தொகுப்பதற்கு வழிகாட்டிய பெருமகனாராவார்கள் என்பதை முதற்கண் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

திரு திருவரங்கனாரவர்கள் 1906 முதல் 1918 வரை கொழும்பில் நெல்லை மாவட்ட வேளாள வணிகர் மளிகைக் கடையில் தலைமைக் கணக்கரா யிருந்தார்கள். அவ்வமயம் கொழும்பிலே சிறப்பாக நடைபெற்று வந்த விவேகானந்தர் கழகத்திலே அவர்கட்கு மிக்க ஈடுபாடுண்டு. விவேகானந்த அடிகள் எழுதிய நூல்களைப் படித்து அவர்கள்பால் பெரு மதிப்பும் பேரன்புங் கொண்டனர். எனவே அவர்கள் திருவுருவப் படத்தில் பலவகையினையும், அவர்தம் குரு அருட்டிரு இராமகிருட்டிண அடிகள், அவர்தம் மாணவர் அபேதானந்த அடிகள் ஆகியோர் திருவுருவப் படங்களையும் வாங்கிப் பாளையங் கோட்டையில் எங்கள் வீட்டு மாடியின் சுவர்களில் கண்ணாடிச் சட்டம் போட்டு அழகு பெற நிறுத்தி வைத்தனர்.

1912 இல் பல்லவபுரம் மறைத்திரு மறைமலையடிகள் எழுதிய நூல்களைப் படிக்கும் வாய்ப்புக் கிடைக்கவே திரு திருவரங்கனார்க்கு அடிகள்பால் மனம் இழுப்புண்டது. அடிகளைக் கொழும்புக்கு வரவழைத்துச் சொற்பொழிவாற்றச் செய்து அவர்களுடைய நூல்களைப் பெருவாரியாக விற்றுப் பொருள் தொகுத்துக் கொடுத்தனர். எனவே அடிகளா ருடைய பல நிலைத் திருவுருவப் படங்களையும், அடிகளாரின் ஆசிரியர் சைவசித்தாந்த சண்ட மாருதம் அருட்டிரு சோம சுந்தர நாயகர் திருவுருவப் படத்தையும் சென்னையிலுள்ள படப்பிடிப்பாளரிடமிருந்து வரவழைத்து அவற்றையும் கண்ணாடிச் சட்டம் போட்டு எங்கள் வீட்டிலே அணிபெற அமைத்தனர்.

1918இல் திருவரங்கனார் கொழும்பிலிருந்து தமதூருக்குத் திரும்பியபின் பாளையங்கோட்டை வீட்டிலும் பின் சென்னைக்குச் சென்று பவழக்காரத் தெரு 2ஆம் எண் வீட்டிலும் ‘திருசங்கர் கம்பெனி’ என்ற புத்தக விற்பனை நிலையத்தை நிறுவி நடத்தி வந்தனர். 1920 செப்டம்பரில் நூற்பதிப்புக் கழகம் பதிவு செய்யப்பெற்றவுடன் ‘திருசங்கர் கம்பெனி’ கழகத்துடன் இணைக்கப்பெற்றது. திருவரங்கனார் திருநெல்வேலியில் கழக

அமைச்சராகவும் அவர்தம் இளவலாகிய தமியேன் சென்னைக் கிளை நிலையத்தின் முகவராகவும் பணியாற்ற வேண்டியவர்களானேம்.

திருநெல்வேலிக் கழகத் தலைமை நிலையத்திலே ஓவியர் நெல்லையா அவர்களைக் கொண்டு சந்தான குரவராகிய மெய்கண்டதேவர், 'அருணந்திசிவம், மறைஞானசம்பந்தர், உமாபதி சிவம் ஆகிய நால்வர் திருவுருவப் படங்களையும், அப்பரடிகள் அவர் தம் தமக்கையார் திலகவதியார் ஆகியோர் திருவுருவப் படங்களையும் பெரிய அளவில் எழுதச் செய்து அமைத்தனர். பின்னர்த் திருநெல்வேலியிலே பிறந்து தந்தையாரால் இடப் பெற்ற சங்கரலிங்கம் என்ற பெயரைத் தாங்கிப் பின் திருப் புகழ்ச் சுவாமி என்னும் தண்டபாணியடிகள் என்று அழைக்கப் பெற்றுத் திருவாமாத்தூரில் சமாதி நிலை கூடிய அருளாளரின் திருவுருவப்படம் பெரிதாக எழுதப் பெற்றுள்ளது.

சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. செல்வக் கேசவராய முதலியாரவர்களுடைய 'தமிழ் வியாசங்கள்' என்ற நூலிலுள்ள சிவஞான மாபாடியமும், சிவஞானபோதத்திற்குச் சிற்றுரையும் எழுதிய சிவஞான முனிவர் திருவுருவப் படத்தைப் பெரிதாக எழுதச் செய்து அமைத்தனர். அந்தத் திருவுருவப்படம் காஞ்சிபுரம் பக்கத்திலுள்ள குளத் தூரிலுள்ள சிலையுருவத்திலிருந்து எடுக்கப்பெற்றதாகும்.

அதன் பின்னர் நெல்லை மாவட்டம் திருவைகுண்டத்திலே பிறந்து மூன்று ஆண்டு வரை ஊமையாகவிருந்து செந்தி லாண்டவன் திருவருளால் ஊமை நீங்கிக் 'கந்தர் கலிவெண் பா'ப் பாடிய குமரகுருபர அடிகள் திருவுருவப் படத்தை எழுதி வைத்தனர்.

சைவக் கண்கள் எனப் போற்றப்பெறும் சிவஞான முனிவரின் பேரில் நூல் நிலையமும், குமரகுருபரரின் பேரில் குழந்தைப் பள்ளியும் திருநெல்வேலியில் கழக நிலையமிருக்கிற தெருவில் அடுத்தடுத்த இல்லங்களில் மிகவுஞ் சிறப்பாகக் கழகவழி நடைபெறுகின்றன.

### கூத்தப்பிரான் திருவுருவப்படம்

சென்னை, பெத்துநாயக்கன் பேட்டையிலுள்ள காசிவிசுவ நாதர் கோயிலில் எழுந்தருளியிருக்கும் கூத்தப்பிரான் இடப் பக்கம் சிவகாமி அம்மை, வலப்பக்கம் மாணிக்கவாசகர்

ஆகியவர்களோடு கூடிய திருவுருவம் மிகவும் அழகு வாய்ந்தது; எடுப்பான தோற்றமுடையது. சித்த மருத்துவப் பெரும் புலவரும் மறைமலையடிகள்பால் அன்புமீக்கூர்ந்தவருமாகிய திரு. ஆனந்தம் அவர்கள் அதனைப் படம்பிடித்து வைத்திருந் தனர். அதைக்கொண்டு கழக அமைச்சர் திருவரங்கனு ரவர்கள் சிறிதும் பெரிதுமாக நிழற்படங்கள் எடுத்துத் தாம் நடாத்திய செந்தமிழ்க் களஞ்சியத்திலும் செந்தமிழ்ச் செல்வி யிலும் நூல்களிலும் வெளியிட்டதோடு விற்பனையுஞ் செய்து வரலாயினர். அதனையே மூவண்ணப் படமாக்கி அச்சுக் கட்டைகள் செய்து பதித்துக் கழகவிழா மலர்களில் வெளி யிட்டும், விற்பனை செய்தும் வருகிறது கழகம்.

திருவள்ளுவர் திருவுருவப்படம்

1855ஆம் ஆண்டில் அச்சிற் பதிப்பிக்கப்பெற்ற வேதகிரி முதலியார் உரையோடு கூடிய திருக்குறள் பதிப்பில் திருவள் ளுவர் உருவப்படமுள்ளது. அதைப்போன்ற உருவப்படம் 1885இல் புட்பரதச் செட்டியார் பதிப்பகத்தில் அச்சிடப்பெற்ற திருக்குறள் உரைப் பதிப்பிலும், 1919 இல் புலவர் கோ. வடிவேலு செட்டியார் விரிவுரை எழுதி அச்சிட்ட பதிப்பிலும் காணப்பெறுகின்றது. அந்த உருவப்படம் திருமயிலாப்பூரி லுள்ள திருவள்ளுவர் கோயிலிலுள்ள திருவுருவத்தைப் போன்றதாகும். எனவே அந்த உருவப்படம் கழக அமைச்சர் திருவரங்கனர் உள்ளத்தைக் கவர்ந்தது. நெல்லை ஓவியர் திரு நெல்லையா அவர்களைக் கொண்டு திருவள்ளுவர் உருவப் படத்தைப் பெரிய அளவில் முதிர்ந்த அறிவும், நிறைந்த பண்பும் ஒழுகும் வண்ணம் எழுதச் செய்தனர். அப் படம் பண்டிதமணி கதிரேசச் செட்டியார், மறைத்திரு மறைமலை யடிகள், பேராசிரியர் சுப்பிரமணிய பிள்ளை, நாவலர் நாட் டாரையா போன்றவர்களுக்கெல்லாம் மகிழ்ச்சியூட்டியது. அதனைச் சிறிதும் பெரிதுமாகப் பல்லாயிரம் படிகளை அச்சிட்டுக் கழகம் விற்பனை செய்துள்ளது. அதனை மூவண்ணப் படமாக வெழுதச் செய்து அச்சுக் கட்டைகள் செய்து பதித்துக் கழக விழா மலர்களில் வெளியிட்டுள்ளதோடு விற்றும் வருகிறது. மேலும் அதனைக் கழகத் திருக்குறள் மூலப்பதிப்புக்களிலும் உரைப் பதிப்புக்களிலும் 1932 முதல் வெளியிட்டுவரும் திருக் குறள் நாட்குறிப்பிலும் அச்சிட்டுப் பரப்பி வருகிறது.

திருக்குறளில் திருவள்ளுவர் வெளிப்படையாக ஒரு சமயத்தைப்பற்றிக் கூருமலும் பொதுவாக எல்லா நாட்டினரும் எல்லாச் சமயத்தினரும் ஏற்றுக்கொள்ளும்படியான கருத்துக்

களைக் கூறியிருப்பதாலும் அவர் திருவுருவப் படத்தில் சமயக் குறி இட்டிருப்பது பற்றிச் சிலர் குறை கூறிவந்தனர். ஆனால் சைவ நன்மக்கள் தாம் திருவள்ளுவர்க்குத் திருமயிலையில் திருக்கோயில் கட்டுவித்து வழிபாடாற்றி வருகின்றனர். அஃது ஆயிரமாண்டுகட்கு முற்பட்ட பழைமை வாய்ந்த கோயிலாகவும் காணப்பெறுகின்றது. திருவள்ளுவர் திருவுருவம் மயிலாப்பூர் கபாலீச்சுரர் கோயில் பெருந் திருவிழாவில் மற்ற தெய்வத் திருவுருவங்களோடு எழுந்தருளப் பெறுகின்றது. அங்ஙனமே சென்னை இலிங்கிச் செட்டித் தெருவிலுள்ள மல்லிகேசுரர் கோயில் முகப்பிலுள்ள சொற்பொழிவு மண்டபத்திலுள்ள திருவள்ளுவர் திருவுருவம் கார்த்திகைத் திங்களில் திருவண்ணாமலை குடை விழாவிலே எழுந்தருளச் செய்யப்பெறுகின்றது.

இன்னும் திருக்குறளில் சைவசமயத்தினர் ஒப்புக்கொள்ளக் கூடிய கொள்கைகள் அனைத்தும் நிறைந்திருக்கின்றன. சைவசித்தாந்த சாத்திர நூல்களில் சித்தாந்த முடிபுகளை விளக்குதற்குத் திருக்குறட்பாக்கள் பல இடங்களில் மேற்கோள்களாக எடுத்தாளப் பெறுகின்றன. கொரடாச்சேரி அருட்டிரு வாலையானந்த அடிகளால் 'திருவள்ளுவர் சித்தாந்த சைவர்' என்று செந்தமிழ்ச் செல்வியில் வெளியிடப்பெற்ற கட்டுரை திருவள்ளுவர் சைவசமயத்தைச் சேர்ந்தவர் என்பதைத் தெளிவுபடுத்தும்.

மேலும் திருவள்ளுவருடைய தாய் தந்தையர் ஒரு சமயத்திற்குரியவராகவே இருத்தல் வேண்டும். திருவள்ளுவர் அந்தச் சமயத்தில் பிறந்து வளர்ந்திருப்பினும் எக்காலத்தவரும், எம்மொழியினரும், எச்சமயத்தினரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய கருத்துக்களையமைத்துத் திருக்குறளை அருளிச் செய்துள்ளார் என்று கோடலே பொருந்தும். எதுபோலவெனில் காந்தியடிகளார் வைணவ சமயத்தைச் சேர்ந்தவரெனினும் பொதுநெறிக் கொள்கைகளையே பரப்பி வந்தனர். அங்ஙனமே திரு. வி. கலியாணசுந்தரனாரும், திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகளும் சைவசமயத்தவ ரெனினும் திருநீற்றுப் பொலிவுடன் பொதுநெறிக் கொள்கைகளைப் பரப்பி வந்தமை யாவரும் அறிவர். எனவே திருவள்ளுவர் திருவுருவம் திருநீற்றுப் பொலிவுடன் விளங்குவதில் தவறொன்றுமில்லை.

தமிழகத்திலே திருக்குறட் கல்வி பெருகி வருதலையும், திருவள்ளுவர் ஒரு சமயத்தையும் சார்ந்தவரில்லை யென்று பரவலாக மக்கள் பேசிவருதலையும் கருத்திற்கொண்டு ஓவியரும், நடிகரும், இசைஞருமாகிய திரு கே. ஆர். வேணு

கோபால் சர்மா அவர்கள் தாம் எழுதிய திருவள்ளுவர் உருவப் படத்தை அஞ்சற்றலையில் 15-2-1960இல் வெளிவருமாறு செய்துள்ளனர். அஞ்சற்றலையில் பொறிக்கப் பெறுவதற்கு முன் திரு. சர்மா அவர்கள் கையாண்ட சூழ்ச்சித் திறனையும் அதற்குமுன் நிகழ்ந்த சில செயல்களையும் இங்கே விவரிப்பது மிகவும் பொருத்தமாகும்.

25-11-52இல் சென்னை மாநில அரசு கல்விச் செயலரவர்கள் 'அவ்வையார்', 'திருவள்ளுவர்', 'கம்பர்' ஆகிய கவிஞர் பெருமக்கள் மூவர் உருவப்படங்கள் வேண்டுமென்றும், அவற்றை விலைச்சீட்டுடன் அனுப்பி வைப்பின் அவற்றிற்குரிய தொகையினை அனுப்பி வைப்பதாகவும் 29864-E/52-10 எண்ணிட்ட கடிதம் கழகத்துக்கு வந்தது.

10—12—1952 இல் திருவள்ளுவர் படமும், அவ்வையார் படமும் தம்மிடமிருக்கின்றன என்றும், அவற்றை விரைவில் விலையின்றி அனுப்பிவைப்பதாகவும், கம்பர் படத்துக்கு மட்டும் காரைக்குடி திரு. சா. கணேசன் அவர்கட்கு எழுதுமாறும் விடை எழுதி அனுப்பப் பெற்றது. 16—12—52 இல் திருவள்ளுவர் படமும், அவ்வையார் படமும் கல்விச் செயலரவர்கட்கு அனுப்பிவைக்கப்பெற்றன. அவை கிடைக்கப் பெற்றன என்று 29864E/52—16 எண்ணுள்ள கடிதம் கிடைத்தது.

"I am directed to acknowledge with thanks the receipt of a copy in each of the Portrait's of Poets Auvvayar and Thiruvalluvar sent with your letter cited above.

(Sd.) N. V. Srinivasan,
for Secretary to Government.

தமிழ்ப்பெருங் கவிஞர் மூவர் படங்களும் அஞ்சற்றலையில் பொறிப்பதற்காகவே நடுவணரசுக்காகக் கேட்கப்பெற்றன என்ற குறிப்பு மட்டுந் தெரியலானேன். யான் அனுப்பி வைத்த திருவள்ளுவர் உருவப்படமே அஞ்சல் தலையில் பொறிக்கப்பெறும் என்று கருதி வாளாவிருந்தேன்.

திருவள்ளுவர் உருவப்படத்தை அஞ்சற்றலையில் பொறிக்க வேண்டுமென்று நடுவணரசு கருதியது ஓவியர் வேணுகோபால் சர்மா அவர்க்கு எப்படியோ தெரிந்துவிட்டது. சமயக் குறி

யில்லாமல் திருவள்ளுவர்க்கு ஓர் உருவத்தைக் கற்பனை செய்து வரைந்தார். உலகத்துக்கே மக்கள் வாழ்வாங்கு வாழத் தகுந்த நல்லறிவு ஈந்த திருவள்ளுவருடைய தலை முடி, நெற்றி, கண், மூக்கு, காது, உதடு, நாடி, கை, கால், விரல்கள் முதலியன வெல்லாம் இவ்வா றிருத்தல் வேண்டுமென்று கற்பனை செய்து உறுப்பிலக்கணத்தை எழுதிவைத்துக் கொண்டனர். அதன்பின் பல துறைகளிலுள்ள நாற்பதுக்கு மேற்பட்ட அறிஞர் பெருமக்களைத் தனித்தனியே தமது இல்லத்துக்கு அழைத்தார்; விருந்தளித்தார். தாம் தீட்டிய திருவள்ளுவர் ஓவியத்தின் பக்கத்திலே அவர்களை நிற்கச் செய்து படம் எடுத்துக் கொண்டார். ஒப்பில் பேரறிவினராகிய திருவள்ளுவரின் உறுப்புக்கள் உறுப்பிலக்கண நூலின்படி இவ்விவ்வாறு அமைந்திருத்தல் வேண்டுமென்று நீளவுஞ் சிந்தித்து உருவத்தை வரைந்துள்ளதாக எடுத்துக்கூறி ஒவ்வொருவரிடமும் பாராட்டுரை எழுதிவாங்கியுள்ளனர். முன் வந்தவரின் பாராட்டுரையினைப் படித்துப் பார்த்துப் பின் வந்த வரும் பாராட்டுரை வழங்கியுள்ளனர். இந்தப்படி நாற்பதின்மர் தனித்தனியே பார்த்தும், அறுவர் மட்டும் தம் நண்பர்களுடன் பார்த்தும் பாராட்டுரை வழங்கியுள்ளனர். பாராட்டுரை வழங்கியவர்களில் ஒருசிலரை மட்டும் அடியிற் காண்க.

(க) தமிழ்ப் பேராசிரியன்மார் :

1. டாக்டர் சேதுப்பிள்ளை, 2. டாக்டர் அ. சிதம்பர நாதன் செட்டியார், 3. டாக்டர் மு. வரதராசன், 4. பன் மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார்.

(உ) கவிஞர்கள் :

1. சுரதா, 2. கண்ணதாசன், 3. நாமக்கல் இராம லிங்கனர்.

(ங) புலவர்கள் :

1. கி. வா. சகந்நாதன், 2. முருகேசனர், 3. முகவை இராசமாணிக்கம், 4. தமிழ்ச்செல்வன்.

(ச) தி. மு. கழகம் :

1. அறிஞர் அண்ணா, 2. நாவலர் நெடுஞ்செழியன், 3. கலைஞர் மு. கருணாநிதி, 4. பேராசிரியர் க. அன்பழகன், 5. சி. பி. சிற்றரசு, 6. இ. வி. கே. சம்பத்.

(௫) தமிழரசுகட்சி :

1. சிலம்புச்செல்வர் ம. பொ. சிவஞானம், 2. தி. க. சண்முகம், 3. தி. க. பகவதி.

(௬) இதழாசிரியர்கள் :

1. எஸ். ஏ. பி. அண்ணுமலை, 2. டி. எஸ். சொக்க லிங்கம், 3. கா. சா. சுப்பாராவ், 4. சீனிவாசராவ், 5. ஆனந்தன், 6. தமிழ்வாணன்.

(எ) எழுத்தாளர் :

1. க. நா. சுப்பிரமணியன், 2. சிவபாத சுந்தரம், 3. கொடுமுடி இராசகோபாலன், 4. சாண்டில்யன்.

(அ) சமயச் சொற்பொழிவாளர் :

1. திருமுருக கிருபானந்தவாரியார்.

(௯) காங்கிரசு :

1. காமராஜ், 2. பக்தவத்சலம், 3. சி. சுப்பிரமணியம், 4. கக்கன்.

மற்றும் நடிகர்களும், ஓவியர்களும், பிறருமாகச் சிலர் அழைக்கப் பெற்றிருந்தனர்.

திரு. காமராஜ், திரு. ம. பொ. சி., திரு. ஹரி, திரு. கக்கன், திரு. பி ஏ. டி சுப்பராயன், க. நா. சுப்பிரமணியன் ஆகிய அறுவர் மட்டும் தங்கள் தங்கள் நண்பர்களோடு வள்ளுவர் ஓவியத்தைப் பார்த்தனர்.

இத்தனை பேர்களிடம் வாங்கிய பாராட்டுரைகளை யெல்லாம் அப்போது நடுவணரசு அஞ்சல், போக்குவரவுத் துறை அமைச்சராக விருந்த மாண்புமிகு டாக்டர் ப. சுப்பராயன் அவர்களிடங் காட்டித் தமது திருவள்ளுவர் உருவப்படத்தை அஞ்சல் தலையில் பொறிப்பதற்கு இசைவு பெற்றுள்ளனர். அவர்களையும் படத்திற் கருகில் நிற்கச் செய்து படம் பிடித்துக் கொண்டனர்.

15-2-1960 இல் திருவள்ளுவர் உருவப் படம் அஞ்சற் றலையில் பொறித்து வெளியிடும் விழாவை யொட்டித் திரு

சர்மா தாம் எடுத்த திருவள்ளுவரோடு கூடிய பெருமக்கள் படங்களையும் அவர்கள் பாராட்டுரைகளையும் தொகுத்துத் 'திருவள்ளுவர் திருவுருவப்பட வெளியீட்டு விழா சிறப்பு மலர்' ஒன்று அழகாக அச்சிட்டு வெளிப்படுத்தி வெற்றி பெற்றார்.

தமிழக வரசும் திரு சர்மா அவர்கள் எழுதிய திருவள்ளுவர் உருவப் படத்தை ஏற்றுப் பள்ளி கல்லூரிகள், நீதிமன்றங்கள், அரசு அலுவலகங்கள், பேருந்துகள் ஆகியவற்றிலெல்லாம் வாங்கி வைக்குமாறு செய்து திரு சர்மா அவர்களைப் பெருமைப் படுத்துகின்றது.

சட்டப் பேரவைத் தலைவராகவிருந்து இப்போது கூட்டுறவுத்துறை அமைச்சராக விருக்கும் மாண்புமிகு சி. பா. ஆதித்தனர் மட்டும் சட்டப் பேரவையில் காட்சி தரும் திருவள்ளுவர் உருவப்படம் தமக்கு எரிச்சலூட்டுகிறதென்று என்னிடம் சொன்னதை இங்கே குறிப்பிடாமல் இருப்பதற் கில்லை. மற்றும் புலவர்களிற் சிலரும் பெருமக்களிற் சிலரும் குறை கூறுவதுண்டு.

திருவள்ளுவர் ஆதி பகவனுக்குப் பிறந்தவர் என்ற கட்டுக் கதையினையும், திரு சர்மா அவர்கள் உள்ளத்திலே உருவு கொண்ட திருவள்ளுவர் உருவத்தையும் இணைத்துப் பார்த்துத் தமிழ் மக்களின் அறியாமை இருந்தவா றென்னே என்று அமைதியுறுவதைத் தவிர வேறென் செய்வது!

ஒரு சமயத்தையுஞ் சாராதவர் என்று பலர் பலவகை யாகத் திருவள்ளுவர் உருவத்தைப் படம் எழுதி வெளியிட் டுள்ளனர். கிடைக்கப் பெற்றவரை வெளிவந்த படங்களை யெல்லாந் தொகுத்து 1968 அக்டோபரில் சென்னை இராசேசுவரி திருமண மண்டபத்தில் கழகம் நடத்திய திருவள்ளுவர் விழாவிலே அமைத்துள்ள நூற்படக் காட்சியில் வைக்கப் பெற்றன.

"ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லார்க் காயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ"

என்று மணிமொழிப் பெருமான் அருளியபடி ஓருருவமு மில்லாத திருவள்ளுவர்க்கு ஆயிரந் திருவுருவமெழுதி நாம் தெள்ளேணங் கொட்டுவோம்.

—வ. சுப்பையா

# "இளந்தமிழா!" - திறனாய்வு

[செஞ்சொற் கொண்டல்
புலவர். சொ. சிங்காரவேலன் M.A., Dip, Ling

*அ. வ. அ. கல்லூரி, மாயூரம்*]

**புதிய கவிதை :**

மறுமலர்ச்சி பெற்று வரும் தமிழ் இலக்கியத்தில் அவ்வப் போது புதிய கவிதைகள் பல எழுந்து வருகின்றன. கற்பனையும், உணர்ச்சியும் பொருந்திய சீரிய இலக்கிய வளம் வாய்ந்த புதிய கவிதைகளைப் படைப்போர் சிலரே. வெறும் சொற்கூட்டங் களைத் தொகுத்தளிக்கும் உரைநடைக் கோவைகளாகப் பல வெளிவந்தாலும், ஆங்காங்கு வானத்தில் மின்னி ஒளிரும் விண்மீன் கணங்கள்போல் ஒளிவிட்டு விளங்கும் பலகவிதை களும் தோன்றாமல் இல்லை. கவிதைகளைப் படித்து அநு பவிக்கும் இன்பத்தைச் சற்றேறக்குறைய நூற்றுக்குத் தொண் ணூறுபேர் இழந்து விட்டிருக்கும் இந்தக் காலத்தே சில ஆண்டுகளில் பலபதிப்புக்களைப் பெற்று ஒளியுடன் உலாவும் கவிதைப் பனுவல்களும் இல்லாமல் இல்லை. அவற்றுள் ஒன்றே 'இளந்தமிழா'. இதனை இயற்றியவர் பழைய பேரறிஞராக நம் மிடையே உள்ள திரு. பெ. தூரன் ஆவர். இவருடைய கவிதைத் தொகுப்பை முதற்கண் கண்டின்புற்ற சொல்லின் செல்வர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் கூறியதுபோல், 'உள்ளத்துடிப்பும் உயரிய ஆர்வமும் உடைய தூரனார்' இக் கவிதை களில் காணப் பெறுகின்றார்.[1] பலதிறப்பட்ட நிலைகளில், பல்வேறு பொருள்களைப் பாடுகின்ற கவிஞருடைய புதிய இளைஞர்களை விளித்துரைக்கும் போக்கு இந்நூற்குப் பெயராய் அமைந்துள்ளது. ஆம்; இளந்தமிழனுக்கு இக்கவிதை நூல் ஒரு நல்ல காணிக்கை. பல்வேறு சிந்தனைகளை இளைய தமிழ் மகன் இதயத்தே தூண்டுவது தூரனாரின் நோக்கம்.

**உயர்ந்த நோக்கம் :**

காந்தீயத்திலே, அன்பு நெறியிலே அழியாத நம்பிக்கை வேண்டும் புதிய தமிழ் மகனுக்கு என்பது இக்கவிஞருடைய நோக்கங்களில் ஒன்று.

---

1. *இளந்தமிழா—ம. ப. பெரியசாமித்தூரன்—பாரி நிலயம்—சென்னை—5ஆம் பதிப்பு—1964—முகவுரை.*

'காந்தியெனும் சத்தியந்தான்
காரீயக் குண்டேறிச்
சிந்தும் குருதியினல்
சிரஞ்சிவி ஆயிற்றே'

என்பார் இவர்.[1] சத்தியம் சிரஞ்சீவித்தன்மை பெற்ற சாகாத் தத்துவம் காந்தீயம். அதனை உள்ளத் திருத்தி இளந்தமிழன் உயர்ந்து வருதல் வேண்டும். 'அறிவால் வளர்ந் தோங்கி அணுவைப் படையாக்கும், திறமாம் செருக்கினிலே அன்புள்ளம் சிறுத்திட்ட, அவனிதான் அழியாமல்' இருந்திட வேண்டு மாயின் அண்ணல் காந்தியடிகளின் திருவாக்குத் துணை செய்திடும் என்பார் இவர்.[2]

'புவிமீதிற் சமத்துவநற்
புதுவாழ்வை நாட்டிடும்'

என்று, காந்தி வகுத்த வழியே சமதருமப் புது வாழ்வை நல்கிடும் என்ற உண்மையை வற்புறுத்துகின்ருர் இவர்.[3] 'சொல்லையும் கடந்து உள்ளத்தோடு உள்ளம் பேசுகின்ற உணர்ச்சித் துடிப்பிலே கவி சொல்ல' ஆசை கவிஞர்க்கு. பாடுகின்ருர் 'கவிக்கனவில்':[4]

'வில்லெனும் சிறைக் கட்டினை—நீங்கி
வேகங் கொண்டுபோய் அம்புபோல்
சொல்லையும் கடந் தேகுமோர்—உள்ளத்
துடிப்பிலே கவி சொல்லுவேன்.'

கண்ணன் கையிற் சுழன்ற சக்கரம் அன்று சமர்செய்ய ஒலித்தது; இன்னுரை வடிவாகிய காந்தியடிகள் கையிற் சுழன்ற இராட்டைச் சக்கரம் சாந்தி கீதம் பாடுகின்றது எனப் பாட்டிசைக்கின்ருர் இவர்:[5]

'சக்கரம் அன்னுட் கையில்
சமர் செயக் கீதம்பாடும்;
சக்கரம் இன்றுன் கையில்
சாந்தியின் கீதம் பாடும்'

---

1. மேற்படி நூல் பக். 66 'சத்தியம்'
2. மேற்படி நூல் பக். 67 'சத்தியம்'
3. மேற்படி நூல் பக். 50 'மறைந்த ஜோதி'
4. மேற்படி நூல் பக். 53 'கவிக்கனல்'
5. மேற்படி நூல் பக். 69 'வாழ்க காந்தி'

அண்ணல் காந்தியடிகள் பொன்னுடம்பு மறைந்ததைக் கண்ணீர் சோரப் பாடும் கவிஞர்க்கு, அண்ணலாரின் அழியாத அன்புநெறிக் கொள்கை மறையாமையினால், காந்தியடிகள் மறைந்திடவில்லை என்றே தோன்றுகின்றது. ஆம்; இளைய தமிழன் இந்தச் சத்திய சாந்தப் பாதையில் வீறுடன் முன்னேறிக் 'காந்தியுகம்' காணவேண்டுமென்கின்றார் கவிஞர்:[1]

> 'காந்திமகான் சாவாரோ?
> காலனவரைத் தொடுமோ?
> சாந்தமுனி சாகவில்லை
> சத்தியமும் சாகாது'

'பாரினிலோர் புதுநெறியைப் பரப்பிடவே காந்தி வந்தார்; அறிவுத் திறம் ஓங்கி அழிவுக்கே படை செய்யும் நெறியறியாப் பூமியிலே நேர்மையன்பு குன்றியதால், மனிதப் பெருஞ்சாதி மாய்ந்தழிந்து போகாமல்,' காந்தி யென்ற புனிதன் தோன்றினான் என்று அண்ணலார் தோற்றத்தின் அருமைப் பாட்டை இளந்தமிழன் செவிகளிலே நலமார நவில்கின்றார்.[2]

**உயரிய சிந்தனைகள்:**

பொதுவுடைமை, சமதருமச் சிந்தனைகள் புதியதமிழர்க்கு வேண்டும். தனியுடைமை பேணித் தடுக்கும் சிறுமைத்தனம் தொலைந்து 'எல்லாருக்கும் எல்லாம்' என்றும், 'எல்லாருக்கும் என்றும்' என்றும் உரைக்கும் மெய்ம்மை உலகிடைச் செழிக்க வேண்டும். சமுதாயத்தில் ஒருவர்க்கு ஒரு நீதி என்ற மனப் பாங்கு நீங்குதல் வேண்டும். மனிதப் படைப்பில் இறைவனுடைய திருவுள்ளத்தின் கருணையைக் காலின்கீழ்ப் போட்டுப் புதைத்து விட்டுக் கயவர் சேர்க்கும் சிறுமைச் சேற்றிற் கால் வையாது, சிந்தனை உயர்தல் வேண்டும். வெறும் இயற்கையை மட்டும், வானை மட்டும், மண்ணை மட்டும், தென்றலை மட்டும், மலரை மட்டும், அருவியை மட்டும், கானகத்தை மட்டும், கடலை மட்டும், பாடித் தீர்த்து வாழ்க்கைப் பயணத்தை முடித்துக் கொள்ளும் 'வாடிக்கைக் கவிஞர்' பலரினும், மக்கட் சமுதாயத்தின் புரையோடிப் போன பகுதிகளைக் களைந்தெறிந்து நோயற்ற புதிய மக்கட் கூட்டத்தை உண்டாக்கும் கவிஞர் மரபு பெருகுதல் வேண்டும். அவர்களாலேயே உலகம் ஓங்கும். யார்க்கும் அஞ்சாமல், எதற்கும் பணியாமல், மக்களுக்கு எதனைச் சொல்ல வேண்டுமென்று அடிமனம்

---

1. மேற்படி நூல் பக். 66 'சத்தியம்'
2. மேற்படி நூல் பக். 67 'சத்தியம்'

உரைக்கின்றதோ அதனை ஆணித்தரமாக உரைக்கின்ற அஞ்சாமை அத்தகு விழுமிய கவிஞர்க்கே உரிமையானது. புதிய தமிழகத்தே பொருளுக்குப் பணியும் போலிக் கவிஞர்கள் ஈசலெனப் பெருகு வதைவிட, ஒளிகாட்டும் ஓரிரு கவிஞர்கள் இருந்தாலும் போதும்; அவர்களுடைய உரைகள் காலத்தை வென்று நிற்கும். பிற கயமைச் சேற்றினோர் கால வெள்ளத்தில் கரைந்துபோக, அழியாத ஞாயிருய், ஒளி குன்ருத திங்களாய் உண்மைக் கவிஞர்கள் அறிவொளி வழங்கிக் கொண்டே யிருப்பர். இந்த உண்மை இளந் தமிழனுக்கு விளங்கியாக வேண்டும்.

**மேலே பற :**

கவிஞருடைய இந்த வேட்கை 'மேலே பற' என்ற தலைப்பிலே குமிழியிட்டுப் பொங்குகின்றது.[1] எப்படி ?

*"மனமே !*
*கற்பனைச் சிறகுகளை விரித்து வானிலே பற !*
*மேலே மேலே மேலே பற !*
*இன்னும் மேலே பற !*
*விண்ணிலேயுள்ள அமுதத்தை மண்ணுக்குக் கொண்டுவா !*
*வாழ்க்கையின் குறுகிய பாதையிலே உழந்து கீழ்நோக்கி [நில்லாதே !*
*உனது கனவுக் கண்களின் பரந்த நோக்கிலே உலகம் உய்க !*
*உனதுபார்வை மேல்நோக்கியே செல்க."*

இங்கு மேனேக்கிய சிந்தனையின் வலிவும் வனப்பும் ஒரு வசன கவிதை வடிவத்திலே வளர்ந்திடக் காண்கின்ருேம். இங்குக் கவிஞர்க்கு உணர்ச்சி பொங்குகின்றது ; இலட்சிய வெறி பொங்குகின்றது ; இளந்தமிழனுக்கு உண்மை காட்டும் மெய்ம்மை வெறி பொங்குகின்றது. நுரையெடுத்துப் பொங்கும் அப்புனலிலே, வடிவம் என்ற ஒன்று தானே ஒன்றிக் கரைந்து விட்டது.

*"நீ புழுவாகாதே ; கழுகும் ஆகாதே.*
*அப்பாலுக்கும் அப்பாலே உயர்ந்துசெல்.*
*இன்பமெல்லாம் கொண்டுவா.*
*எனக்கு எனக்கு என்று பேசாதே.*
*எல்லாம் எல்லோருக்கும்—*
*இன்பமே எண்ணுவாய், அன்பே எண்ணுவாய்"*

---

1. மேற்படி நூல் பக். 81 'சத்தியம்'

என்று எழுதும்போது, புதிய கவிதை உலகிற்குக் கவிஞர் விடுக்கும் வேண்டுகோளாகக்கூட இதனைக் கொள்ளமுடிகிறது. இன்றைக்குப் புதிய புற்றீசற் கவிஞர்கள், குடிவெறிப் பாட்டுப் பாடி மக்கள் மனங்களில் கீழ்மை வித்துக்களை வேரோட விடுகின்ற அவலத்தை எண்ணியே கவிஞர்விடும் நெஞ்சக் கண்ணீரோ இது? தசை யுணர்ச்சியை, பால் வெறியை ஊட்டும் போலிக் கவிஞர் மரபு, 'ஒரு கோப்பைக் குடியிருப்பு'க் காசுக் கவிஞர்களின் தொடர்ந்த வழி இந்த நாட்டிலே தொடர்ந்து வாழும் நிலை இருக்குமானால், ஒழுக்கமுள்ள ஓர் உள்ளத்தையேனும் எதிர்காலத் தமிழகம் காணுமா என்பது ஐயமே. 'எது நிலைத்த அறிவுச் செல்வத்தைப் பரப்பும் உயர்நெறி', 'எது அன்பு நெறியைப் பரப்பும் அருநெறி', 'எது தூய காதல் உணர்வை அரும்ப வைக்கும் தமிழ்க் காதல்நெறி' அந்நெறி நிற்கும் செம்மல் உள்ளங்கள் தழைத்தாலேயே எதிர்காலத் தமிழகத்தில் ஒழுக்கம் இருக்கும்; காதல் இருக்கும்; கற்பு இருக்கும்; அன்பு இருக்கும்; 'ஆத்ம அநுபவம்' என்னும் தனியின்பம் இருக்கும். அதனை அறிவுறுத்த வேண்டியது சிந்தனையாளர் கடமை. உலகு வெறுத்தாலும் விழைந்தாலும் அந்த உண்மையைக் கவிதை, உரைநடை முதலிய துறைதோறும் துறைதோறும் தொட்டுக் காட்டிக் கொண்டேயிருக்க வேண்டிய துணிவு அறிவு உடையார்க்கு என்றும் வேண்டும். இளந்தமிழனுக்கு இந்த இனிய கவிஞர் 'மேலே பற' என்று சுட்டிக்காட்டி இந்த உண்மையைப் பதியவைக்கும் திறம் போற்றத் தகுந்ததாக உள்ளது.

> "கற்பனைச் சிறகுகளை விரித்து உயர்ந்துபற.
> மேலே மேலே உயர்ந்துபற"

என்ற வரிகள் இளந்தமிழன் இதயத்தே என்றும் நிலைத்திருக்க வேண்டிய திட்பம் உடையவை.

**தடைகளைத் தாண்டி :**

முன் நோக்கிச் செல்லும் புதிய சமுதாயம் தடை பல வந்தாலும் முன்னேறிச் செல்லுதல் வேண்டும். துன்பத்தைக் கண்டு துவண்டிடலாகாது. இடுக்கண் அழியாமை எழுதிய வள்ளுவம் இலட்சியப் பாதை செல்வார்க்கு இனிய துணையாக இருத்தல் வேண்டும். கவிஞருடைய 'செல்லடா' என்ற கவிதை இந்த இலட்சியப் பயணத்தின் எழிலை நமக்குக் காட்டுவதுடன், இளைய தமிழன் குறிக்கோளைத் தொட்டுக்

காட்டுகின்றது.[1] தொட்டுக் காட்டும் வகையோ நம் மெய் சிலிர்க்க வைக்கின்றது. கவிஞருடைய குறுஞ்சீர் வண்ணம் குத்தீட்டியாய்ப் பாய்கிறது :

> "முன்வைத்த காலைப்
> பின்வைக்க லாகுமோ ?
> உன்னத லட்சியம்
> உச்சியில் உள்ளது"

இடையில் இலட்சியத்துக்கு ஊறு விளைக்கும் புல்லன், அவனை இந்த நாட்டின் மதலைதானே என்று கேட்கும் கவிஞருடைய துணிவு நம் தோளை உயர்த்துகின்றது :

> "ஆரடா அங்கே
> அணியைக் குலைத்தவன் ?
> பாரடா முன்னால்
> பாரதன் அல்லனீ ?"

இதே உணர்ச்சிக்கோலம் 'மானிடா எழுக' என்று முழங்கும் வீரமுழக்கத்திலும் அணி செய்கின்றது. 'மாண்புமிக்குடைய மானிடா எழுக, வையகந் தன்னை வானகம் ஆக்குக' என்கின்றது கவி உள்ளம். 'இறைவன் திருப்படைப்பில் இப் பூவுலகம் ஒருபிடி மண் ; ஓரணு மனிதனே' என்றாலும், 'திறமையில் முதிர்ந்தவன்' என்று மனிதகுலத்தின் மாண்பைச் சுட்டுகின்ற கவிதை,

> "செயற்கரும் பணியால், தீஞ்சுவைக் கலைகளால்
> உயிர்க்குளே நின்றிடும் ஒருவனை அறிவதால்
> என்றும் புவிதனில் இருந்திடும் சிறப்பினை
> நன்றுநீ கொண்டனை நலம்எலாம் பெருகவே"

என நிறைந்து மனிதன் கடமைகளை நினைவில் இருத்தி முடிகின்றது. 'உன்னுள்ளே இருக்கும் ஒருவனை அறிக' எனும் போது இந்தப் பழந்திருநாட்டின் 'ஆத்ம ஞானம்' ஒளிக்கதிர் பாய்ச்சுகின்றது ; 'பணிசெய்' எனும்போது சோம்பரைச் சுட்டெரிக்கும் உற்சாகம் குமிழியிடுகின்றது ; 'கலைகள்' எனும் போது உள்ளம் உணர்வில் கரைந்து வெளிப்படும் கலைத்திறம் பொங்குகின்றது ; 'என்றும் நிலைத்தல்' எனும்போது, 'அழியாத மனித குலத்தின் அமரப் படைப்புக்கள் அனைத்தும் நெஞ்சில் அலைமோதுகின்றன.[2]

1. மேற்படி நூல் பக். 84 "செல்லடா"
2. மேற்படி நூல் பக். 96 'மானிடா எழுக'

அழைப்பு :

இளந்தமிழனுக்கு அழைப்பு விடுக்கும் கவிஞர்,[1]

''பழமையின் உயர்வையும்
அழகையும் நன்றாய் அறிந்திடு!
உன்னருஞ் சாத்திரம் உயர்கலை உடையாய்
இளைஞனே எழுந்துநில்''

என்று உணர்ச்சியூட்டுகின்றார். 'காலம் வரும்' என்று காத்துக் கிடவாமல், 'இன்றே செய்திட இன்னே செய்திட இளைஞனே எழுந்துநில்' என்று பணிசெய்ய அழைக்கின்றார். வீண்பேச்சு நாட்டிற்கு நன்மை பயவாது, நல்ல தொண்டே வேண்டும் என்று அறிவுறுத்தும் வீர அழைப்பு இது.

வழி :

'அன்புவழி' நாட்டில் பெருகிடுதல் வேண்டுமென்பது கவிஞரின் விருப்பம்.[2]

''அன்பினிலே மனம் மலர
அமரனைப்போல் வாழ்ந்திடுவாய்
இன்பம் பெருகி எங்கும்
எவ்வுயிரும் மகிழ்ந்திடவே''

என்று இளந்தமிழனுக்கு அறிவுறுத்தி, அதன் விளைவைத் திருமூலர் வழிநின்று பாடுகின்றார் ஆசிரியர்;[3]

''அன்புவழி அன்புநிலை
அன்புச் சிவமாவாய்
அன்புவழி ஓங்கிவிட்டால்
அமரநிலை வந்திடுமே''

ஆம்; திருமூலர் கவிதைக்கு ஓர் அழகிய விளக்கம் இது.

மழலை போற்றல் :

குழந்தைகளை விழையாத உள்ளம் இல்லை. கவிஞர்க்குக் குழந்தைகளைக் கண்டால் கவி பிறக்கிறது:[4]

---

1. மேற்படி நூல் பக். 109 'அழைப்பு'
2. மேற்படி நூல் பக். 111 'அன்புவழி'
3. மேற்படி நூல் பக். 115 'அன்புவழி'
4. மேற்படி நூல் பக். 25 'பச்சைக் குழந்தை'

"பச்சைக் குழந்தை என்றால்—எனக்கொரு
பாசம் பிறக்குதம்மா—அதன்
கொச்சை மழலையிலே—உளந்தான்
கொஞ்சிக் களிக்குதம்மா"

பாச உணர்வில் தழைத்து உள்ளத்தை மழலைப் பேச்சில் கொஞ்ச விடுகின்றார். குழந்தைக் கண்ணீர் இவரது நெஞ்சை உருக்கிவிடுகின்றது. நடு வீதியிலே சின்னஞ்சிறு குழந்தை ஒன்று 'அம்மா அம்மா' என்றழைத்து முத்துமுத்தாகக் கண்ணீர் வடிக்கக் கண்டு உளம்பதைத்துப் பாட்டிசைக்கின்றார் இவர்.[1]

"தெய்வச் சுடர்க் குழந்தை
சிரித்தமுகம் வாடிமிக
நையக் கண்டால் உள்ளம்
நடுங்குகின்றதென்செய்வேன்?"

"கன்னத்தில் முத்துதிரக்
கவலையிருந் தான்படர
என்னத்துக் காகஇந்த
இளங்குருத்து வாடினதோ?"

"சின்னஞ் சிறுமொட்டு
சிரித்துமகிழ்ந் தாடாமல்
கொன்னி இதழ்பிதுக்கிக்
குலைகின்ற காரணம்என்?"

இந்த வரிகளிலே, 'தெய்வத்தின் சுடரையே குழந்தையாகக் காணும் கற்பனை மனம் ஒளிவிரிக்கின்றது. 'இளங்குருத்து', 'சின்னஞ்சிறு மொட்டு' என்பன குழந்தை இயல்பைக் குளிரக் குளிரக் கூறி மகிழும் இரண்டு ஓவியங்கள், வாய்குழறி அழுவதை—இதழ்களை விரித்து அழுவதை இறுதிவரி ஓவியமாக்கி யுள்ளது. உலகை அன்புமயமாக்கும் கவிஞர்க்கு, இறைநிலை கொழிக்கும் பிள்ளைப் பாட்டு இவ்வாறு கள்ளமிலாக் கிள்ளைப் பாட்டாக வெளிவருகிறது. குழந்தைத் துயரம் கண்டு குமுறும் இவருடைய கனிந்த நெஞ்சம், பறவைக்குஞ்சு ஒன்றையும் கண்டு உருகுகின்றது. குயிற்குஞ்சு ஒன்றைக் கருங்காக்கை ஒன்று கொத்திக் கொன்றுவிட்ட காட்சி இவர் உள்ளத்தைச் சுட்டெரிக்கின்றது:[2]

---

1. மேற்படி நூல் பக். 23 'அழுங்குழந்தை'
2. மேற்படி நூல் பக். 28 'குயிற்குஞ்சு'

''வசந்தத்தின் தூதுவனை
மாஞ்சோலை இன்னிசையை
கசந்த மனத்தாலே
காக்கை கடித்ததந்தோ ?''

என்று அதற்கு இரங்குகின்றார். ''கருவண்ணக் கருமூக்கி, கருமனத்துக் கருங்குரலி'' என்று பாடித் தம் துன்பத்தை வெளிப்படுத்துகின்றார் இவர். அதுமட்டுமோ ? இந்தக் காட்சியில் இவர் சமுதாயத்தின் ஒரு பகுதியைக் காண்கின்றார்.[1]

''கொள்ளும் உலகத்துக்
கூட்டத்தில் காகமொன்றோ ?
உள்ளம் புழுங்கியவர்
ஓங்குதிறன் தான்நசுக்கும்
சின்னத் தனமெல்லாம்
தெரிகின்ற திங்கேயும்
வண்ணப் பறவைகளின்
வாழ்க்கையிலும் இதுதானோ ?''

ஒருவர் திறனை மற்றவர் நசுக்கும் சிறுமைத்தனம் மனிதக் கூட்டத்தில்தான் இருந்ததென்றெண்ணி யிருந்தேன் ; பறவை வாழ்க்கையிலும் இதுதானோ என்று நோகின்றார்.

**காதல் வன்மை :**

கண்ணீரைச் சுவையான கவிதையில் வடிக்கின்றார். பெண்களுக்கு வாய்த்த பாசுபத அத்திரம் என்னும்போது நகைச்சுவை நிழலாடுகின்றது. காதலியின் கண்களிலே கண்ணீரைக் கண்டுவிட்டால், மோதி மிதித்தழிக்க முந்துகின்ற இளைஞர்களைக் கூறிக் காதலின் வன்மையையும் காட்டுகின்றார்.[2]

**அழகுப் பற்று :**

அழகைக் கண்டு இன்புறுவதும், அதனை உளமாரப் பாராட்டுவதும் கவிஞர் இயல்பு. இவரும் அதற்கு விலக்கல்லர். அழகை அழகாகப் பாடி மகிழ்விக்கும் இயல்பும் உடையவர் இவர்.

---

1. மேற்படி நூல் பக். 29 'குயிற்குஞ்சு'
2. மேற்படி நூல் பக். 36 'கண்ணீர்'

நெல் முதலிய பயிர்களை அறுக்கச் செல்லும் கருக்கரிவாளைக் கையில் ஏந்திச் சென்றும் அழகிய பெண் ஒருத்தியின் எழிலிலே உள்ளத்தை இழந்து பேசுகின்றார் இப்படி :[1]

"கருக்கரிவாள் கைக்கொண்டே
கழனிசெலும் இளநங்காய்
அறுத்துவிட்டாய் என்னுளத்தே
அஞ்சனக்கண் வாளாலே"

'ஓடுந் திமில் கொண்டு உயிர்கொல்வர் உன் ஐயர்; ஓடுந் திமில் கொண்டு உயிர் கொல்வை மன் நீயும்' என்ற சிலப்பதிகாரம் இவ்வரிகளைப் படிக்கும்போது நினைவில் எழாமற் போகாது.

"நீலமலர்க் கண் இரண்டு—என்றன்
நெஞ்சை மயக்கிடும் வண்டு !
மாலை இருளென வளரும்—அவள்தன்
மைக்குழலில் உளம் தளரும்"

என்று அழகு வழிபாடு செய்கின்றார் ஓரிடத்தில்.[2]

"கன்னக் குழிமதுத் தேக்கும்—அதுவென்
காதலை மீறிஉண் டாக்கும்
மின்னைப்போல் தோன்றும் சிரிப்பு—கொஞ்சம்
வேறுபட்டால் எங்கும் நெருப்பு"

என்னும் வரிகளில் காதல் களிக்கூத்தாடுகின்றது. [3]குழி விழும் கன்னமும், மின்னற் சிரிப்பும் புத்துணர்ச்சியைப் பரப்பும் பொலிவு தெரிகின்றது.

'பட்டிக்காட்டில் வளர்ந்த இளமங்கை' ஒருத்தி பற்றிய ஓவியம் 'காதல் ஏக்கமாய்' விரிகின்றது :[4]

"வெட்டி அலங்கரித்து வளர்க்காத காட்டுப்பூ
சுண்ணமறியாத சோதிமுக முடையாள்
கண்ணுக்கு மையில்லை ; கடைக்கண்ணிற் குறும்பில்லை ;"

என்று பெருநகரத்து நாகரிகம் படராத சிற்றூர் அழகைப் பாடுகின்ற போது, "செயற்கைக் குழல் சேர்த்துச் சிங்காரம்

---

1. மேற்படி நூல் பக். 38 'கருக்கரிவாள்'
2. மேற்படி நூல் பக். 99 'நீலமலர்க்கண்'
3. மேற்படி நூல் பக். 99 'நீலமலர்க்கண்'
4. மேற்படி நூல் பக். 118 'காதல் ஏக்கம்'

செய்யாத இயற்கை வனப்பு'' என்று கூறுவது எத்துணைப் பொருத்தமானது.

''நீலக் கடல்விழிகள்—அமுதம்
நிறைந்த பொக்கிஷமோ?
கோலக் கவிதை யெல்லாம்—கன்னக்
குழியிற் காண்பதென்னே''

என்று 'ஆசை இளநங்கை' யின் அழகை—கன்னக் குழியிற் கோலக் கவிதை பலகாட்டும் எழிலைப் பாடி மகிழ்கின்ருர் இவர்.[1]

பூக்காரி ஒருத்தியின் புத்தழகை,

''நெற்றியிலே செம்பொட்டு நீள்விழியில் கவியமுதம்
கற்றையிலே சேர்குழலாம் காரிருளின் குடியிருப்பு''

''மாமதுரைச் சிலையழகில் வடித்தெடுத்த நாசிமலர்
தேமதுரக் கிண்ணியெனச் சிரித்தவாய்; செவ்விதழ்கள்''

''சேரன் திருநாட்டுச் செவ்வியரின் பொன்னிறத்தாள்
மாரனுக்கு வாய்த்தபுது வாளியெனத் தானசைந்தாள்''

என்றெல்லாம் பாட இவர்க்குப் பெருமகிழ்ச்சி. 'மன்மதனுக்குப் புதுக்கணை இவள்' என்று அறிவுக்கு இன்பூட்டும் புதுஉருவகம் தருகிருர் இவர்.[2]

ஆங்கில மணம்:

ஆங்கிலக் கவிதையின் மணம் இத்தொகுப்பிற் சில கவிதைகளில் கமழ்கின்றது. எடுத்துக் காட்டாக 'யாரது' என்பதைக் கூறலாம். உலகவாழ்விற் கிடந்துழலும் உயிர்க் குலங்களைத் தேடிவந்து இறைவனே அருள்புரிய வந்தாலும் உயிர்களுக்கு அதனைப் பெறுவதில் ஆர்வமும் ஊக்கமும் இல்லை என்பது உள்ளுறையாக நிழலாடுகின்றது; '*The listener*' என்ற ஆங்கிலக் கவிதை மாலை நேரத்தில் மணக்கும் முல்லை யாய் இதனைப் படிக்கும்போது நெஞ்சில் மெல்ல மெல்ல விரிகின்றது.[3]

---

1. மேற்படி நூல் பக். 142 'ஆசை இளநங்கை'
2. மேற்படி நூல் பக். 30-31 'பூக்காரி'
2. மேற்படி நூல் பக். 106 'யாரது'

"யாரோ என் கதவைத் தட்டுகிறார்கள்.
யாரது?
யார் என்று கேட்டால் பதில் வருவதில்லை.
நானோ கதவைத் திறந்து பார்ப்பதுமில்லை.
உண்டும்
குடித்தும்
ஆடியும்
பொழுதைக் கழிக்கிறேன்"

என நடக்கிறது உணர்ச்சி. உயிர்கள் புறக்கணித்தாலும் இறைவன் பொறுமையின் சிகரமாய் நின்று மீண்டும் மீண்டும் அருள்புரியவே திருவுள்ளம் கொள்கிறான் என்பதைக் கூறாமற் கூறி நிறைவு பெறுகிறது இந்தக் கவிதை:

"மறுபடியும் எனது கேளிக்கைகளில் முழுகி விடுகிறேன்.
இடையிடையே யாரோ பொறுமையாய்க் கதவைத் தட்டுகிறார்கள்.
ஆனால் என்களியாட்டங்களை விட்டுப்
போய்க் கதவைத் திறந்துபார்க்க எனக்கு
விருப்பமோ எண்ணமோ இல்லை"

'வாழ்க்கைப் பிரயாணம்' உலக வாழ்வின் துயரங்களுக்கு உருவகம் தருகிறது.[1]

"ஓடக்காரா
என்னை நீ எங்கு தள்ளிச் செல்லுகின்றாய்?"

என்று படைத்தவனுடன் பேசுகின்றார் கவிஞர்.

"உறங்கிக் கிடப்பதும் விழித்துச் செல்வதுமாய்
எத்தனை காலந்தான் கழியுமோ?
எத்தனை உடைகள் மாற்றி அணிவதோ?
ஓடக்காரா
இன்னும் கருணை பிறக்கவில்லையா?"

என்று கனிந்து வினவுகின்றார் கருணைக்கடலை நோக்கி.

**இளந்தமிழன் ஓங்கிட:**

இளந்தமிழனுக்கு முதலில் கவிஞர் கூறும் சில உரைகள், தொடர்ந்து இவ்வாறு விளக்கம் பெறுகின்றன பல நிலைகளில்:[2]

1. மேற்படி நூல் பக். 107 'வாழ்க்கைப் பிரயாணம்'
2. மேற்படி நூல் பக். 17-18 'இளந்தமிழா'

"வாழ்க்கையிலே சமத்துவமும்
மனத்தினிலே உயர்நோக்கும்
மாட்சிமிகும் அறநெறியும்
ஆட்சிசெயப் போரிடுவாய்"

"அனைவருக்கும் பொதுஉரிமை
அனைவருக்கும் பொதுநீதி
அனைவருக்கும் பொதுஉடைமை
ஆக்கிடவே தோள்புடைப்பாய்"

என்று தொடக்கத்திலேயே சொல்லித்தான் பாடத் தொடங்கினார் இவர். 'மக்கள் எலாம் ஓர் குலமாம் மாநிலமே ஒரு வீடாம்; தக்க நெறி இதுகண்ட தமிழன் நீ' என்று பழந் தமிழ்ப் பாதையில் புதிய போக்கின் உறுதிப்பாட்டை நினைவூட்டிப் புறப்பட்டு, மேலே மேலே உள்ளத்தைச் சிறகடிக்கச் செய்துவிட்டார் இவர். ஆம்; கவிதையின் நோக்கமே இது தானே!

"கவிதையை ஒருமுறை படித்தால் போதாது; பலமுறை படிக்க வேண்டும். கவிதையின் ஓசை நயம், சொல் நயம், அதன் கற்பனை, அது விவரிக்கும் உள்ளக் கிளர்ச்சிகள் எல்லாம் நன்றாக நமக்குத் தெரியவேண்டும். அப்பொழுது தான் அதன் முழுச்சுவையும் வெளிப்படும்" என்றும், "ஆழ்ந்து பார்க்கப் பார்க்கத்தான் கவிதையின் முழுவடிவமும் பொருளும் சுவையும் வெளியாகும்" என்றும் முன்னுரையிலே கவிஞர் கூறும் மொழிகள் உள்ளே புகுந்து நோக்குவார்க்குத் தக்க ஊன்றுகோலாகப் பயன்படுகின்றன.[1]

'மேலே பற', 'யாரது?', 'வாழ்க்கைப் பிரயாணம்', 'இருளும் ஒளியும்' என்பன வரம்பற்ற வடிவம் கொண்டு வசன கவிதை என்ற பெயர்க்கு உரியவையாகின்றன. இவற்றில் முழு உணர்ச்சியும் கற்பனை நுட்பமும் காணலாம்; ஓசை நயம் இல்லை என்ற கருத்து கற்பனை, உணர்ச்சியில் கலந்து—கரைந்து—போய்விடுகின்றன. வசன கவிதையாக இவை தலைநிமிர்ந்து எழுகின்றன.

திருப்பூர்க் குமரன், கிழவியும் ராணுவும், பெலால்சென், அஸ்ஸாமியக் கதை, சம்யுக்தை முதலிய வரலாற்றுப் பாட்டுக்

1. மேற்படி நூல் பக். 9 'ஆசிரியர் முகவுரை'

களும் தக்க வண்ணம் கவிவண்ணம் பெற்று, ஆசிரியரின் உள்ளத்துடிப்பினுல் பாட்டாகி வந்து இன்பம் தருகின்றன.

நடை :

கவிதைகளில் உள்ளம் பேசுகின்றது ; ஆதலால் பேச்சு நடையே இயல்பாகப் பல இடங்களில் உள்ளது. காதலியின் கடிதம் முதலியவற்றில் இது இயல்பாக விளங்கப் பார்க்கலாம். இவ்வாறு பாடும் கவிஞர்க்குத் 'திடீர்' என்று வடசொற்களின் மீது நாட்டம் வந்துவிடுகின்றது.

'ஜேய் ஹிந்த் ஜேய் ஹிந்த்
ஜேய் ஹிந்த் ஜேய் ஹிந்த்'

என்று பல்லவியிட்டுப் பாடுகின்ருர் ; அங்கும் சரணமெல்லாந் தமிழே ; பல்லவி மட்டுமே அப்படி அமைகின்றது.[1]

"ஜயபாரதம் ஜயபாரதம் ஜயஹே
ஜயபாரதம் ஜயபாரதம் ஜயஹே
உயருன்னத மலைராஜனருள் குமரி
உமையாளவள் வடிவாகிய தேவி"

என்றும் பாடுகின்ருர்.[2] வடசொற்களைக் கலந்து எழுகின்ற இந்த இடங்கள் அருணகிரிநாதரது சில வாக்குக்களை நினைப் பூட்டுகின்றன. மொழி நடையில் தூய்மையும் இனிமையும் விழை வோர்க்கு இந்த இடங்கள், நல்ல சுவையான உணவின் இடையே கடிபடும் கற்களைப் போன்றன என்று கூறுவது தவருகாது.

தன் பெருமையை அறிந்து தமிழன் சீரிய வாழ்க்கைப் பாதையிற் செல்லவும், சிந்தனைத்திறம் செழித்துச் சிறந்திடவும் கவிஞர் திரு. தூரனுர் தந்துள்ள 'இளந்தமிழா' கவிதை நூல் நற்றுணை ஆகும். எளிய, இனிய, இக் கவிதைகளைத் தமிழ் மக்கள் படித்தின்புற்று வருகின்றமையை இதன் பல பதிப் புக்கள் வெளிவந்திருத்தல் காட்டும். மறுமலர்ச்சித் தமிழ் இலக்கி யத்திற்கு ஆசிரியர் செய்துள்ள தொண்டிற்குத் தமிழ் அறிவுலகின் பாராட்டும் நன்றியும் என்றும் உண்டு. புதிய கவிஞர் மரபிற்கு 'இளந்தமிழா' நல்ல வழித்துணை.

———

1. மேற்படி நூல் பக். 78 'ஜேய் ஹிந்த்'
2. மேற்படி நூல் பக். 144 'ஜயபாரதம்'

# தமிழில் இணையமைப்பு வாக்கியங்கள்

[டாக்டர் கி. கருணுகரன், எம்.ஏ., பிஎச்.டி., டிப். இன் கன்னடா,
மொழியியல் துறை, அண்ணுமலைப் பல்கலைக்கழகம்]

ஒரே மாதிரியான இலக்கணச் செயலைச் [Grammatical function] செய்வனவாகவும், ஒரே விதமான மொழியமைப்பைக் (Linguistic Structure) கொண்டதாகவும் உள்ள இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வாக்கியங்களைச் சில இணைப்புச் சொல்லியன்கள் (Conjunctive Morphemes) மூலம் இணைத்துப் பெறப்படும் வாக்கியங்களை 'இணையமைப்பு வாக்கியங்கள்' (Co-ordinate Construction) என்று சொல்கிரேம்[1].

தமிழ் மொழியில் குறைந்தது இருவகையான இணையமைப்பு வாக்கியங்கள் உள்ளன எனலாம். அவை யாவன: (1) கூட்டு அமைப்பு வாக்கியங்கள் (Additive type of constructions), (2) மாற்று அமைப்பு வாக்கியங்கள் (Alternative type of constructions) என்பனவாகும். தமிழில் கீழே கொடுக்கப்பட்டுள்ள

இராமன் வந்தான் (1)

சீதை வந்தாள் (2)

என்ற இரண்டு வாக்கியங்களையும் (எழுவாய்+பயனிலை— வாக்கியங்கள்) இணைத்துக் கீழே வரும் இணையமைப்பு வாக்கியம் பெறப்படுகிறது.

இராமனும் சீதையும் வந்தார்கள் (3)

இந்த இணையமைப்பு வாக்கியம், மேலே கொடுக்கப்பட்டுள்ள முதலிரண்டு வாக்கியங்களில் (1 & 2) வரும் பெயர்ச்சொல் தொடர்கள் (Noun Phrases) இணைக்கப்பட்டும், அத்துடன் அவ்வாக்கியங்களில் வரும் முற்றுவினையானது (Finite verb)

---

1. "A co-ordination is a construction of two or more members which are equivalent as to their grammatical function, and bound together at the same level of structural hierarchy by means of a linking device."

See. Simon C. Dik, *Co-ordination* Amsterdam, 1968, (P. 25).

பன்மையாக்கப்பட்டும் பெறப்படுகிறது. இம்மாதிரியான கூட்டு அமைப்பு வாக்கியங்கள், இணைக்கப்படும் வாக்கியங்களில் வரும் பெயர்ச்சொற்கள் இரண்டும் எழுவாயாகவும் (Subject), அவற்றில் பயன்படுத்தப்பட்டுள்ள வினையானது ஒன்றாகவும் இருந்தால்தான் சாத்தியமாகும்.

எ. காட்டு: எ ப

| | | |
|---|---|---|
| இராமன் | வந்தான் | (4) |
| பெ[1] | வி[1] | |
| கண்ணன் | வந்தான் | (5) |
| பெ[2] | வி[1] | |

மேலே சொல்லப்பட்டுள்ள எடுத்துக்காட்டுக்களில் பெ[1] & பெ[2] வெவ்வேறாக ஆனால் அதே நேரத்தில் அவை எழுவாயாகப் பயன்படுத்தப்பட்டும், அவற்றில் வரும் முற்று வினைகள் ஒன்றாகவும் உள்ளதை நம்மால் காணமுடிகிறது.

தமிழில் எழுவாய்+செயப்படுபொருள்+பயனிலை பிரிவில் வரும்

நான் இராமனைப் பார்த்தேன் (6)

நான் கண்ணனைப் பார்த்தேன் (7)

ஆகிய இரு வாக்கியங்களையும் இணைத்து

நான் இராமனையும் கண்ணனையும் பார்த்தேன் (8)

என்ற இணையமைப்பு வாக்கியம் பெறப்படுகிறது.[2] இங்கு வினைச்சொல் தொடர்களில் (Verb Phrases) வரும் பெயர்ச்சொற்களான இராமன், கண்ணன் என்ற இரண்டும்—உம் என்ற இணைப்புச் சொல்லியனைக் கொண்டு இணைக்கப்பட்டுள்ளன. இங்கு—உம் என்ற சொல்லியன் (Morpheme) இவ்விரண்டு பெயர்ச்சொற்களில் வரும் வேற்றுமைச் சொல்லியனுக்குப் (Case Suffix) பிறகே சேர்க்கப்பட்டுள்ளது. இந்த வகையான கூட்டு அமைப்பு வாக்கியங்களிலும் வினையானது ஒன்றாகவே இருத்தல் வேண்டும்.

மேலே கொடுக்கப்பட்டுள்ள (6), (7) ஆகிய வாக்கியங்களில் பார்த்தேன் என்ற வினைமுற்று ஒன்றாகவே உள்ளதைக்

2. See Dr. S. Agesthialingam, *A Generative Grammar of Tamil,* [DLP, 11], Annamalai University, 1967.

காணலாம். கூட்டு அமைப்பு வாக்கியங்களில் பயன்படுத்தப் படும் சொல்லியன் —உம் என்பதாகும். அதேபோல 'மாற்று அமைப்பு' வாக்கியங்களில் பயன்படுத்தப்படும் சொல்லியன்கள் —ஆவது, —ஆகிலும் போன்றவைகளாகும்.

1. கூட்டு அமைப்பு: கூட்டு அமைப்பு வாக்கியங்களில் வரும் பெயர்ச்சொல் தொடர்களையோ அல்லது வினைச்சொல் தொடர்களையோ இணைக்க முடியும். இணைக்கப்படும் பெயர்ச் சொல் தொடர்கள் வாக்கியத்தில் எழுவாயாகவோ அல்லது வினைச்சொல் தொடரின் ஒரு பகுதியாகவோ இருக்கும்.

1. 1 இராதையும் கமலாவும் ஆடினர்கள் (9) என்ற வாக்கியத்தில் இரண்டு வாக்கியங்கள் உள்ளன. அவை யாவன:

இராதை ஆடினள் (10)

கமலா ஆடினள் (11) என்பனவாகும்.




> இராதையும் கமலாவும் ஆடினர்கள்

மேலே கொடுக்கப்பட்டுள்ள வாக்கியங்களை இணைக்கும்போது அவற்றிலுள்ள பெயர்ச்சொற்கள் இணைப்புச் சொல்லியன் மூலம் சேர்க்கப்பட்டும், முற்றுவினையானது பன்மையாக்கப் பட்டும் வருவதைக் காணமுடிகிறது.

## 1. 2 பெயர்ச் சொல்தொடர் — இணையமைப்பு[3]

இராமனும் இலக்குமணனும் சகோதரர்கள் (12) இவ்வாக்கியத்தில் இரு பெயர்ச்சொல் தொடர்கள் உள்ளன. முதற் பெயர்ச்சொல் தொடரில் இரு பெயர்ச்சொற்கள் உள்ளன. இரண்டாவது பெ. தொடர் சகோதரர்கள் என்பதாகும். முதற் பெ. தொடரில் வரும் இரு பெயர்ச்சொற்களும் —உம் என்ற இணைப்புச் சொல்லியனல் சேர்க்கப்படுகின்றன. இவ்வாறு பெறப்படும் இணையமைப்பு வாக்கியங்களை பெயர்ச்சொல் தொடர் இணையமைப்பு வாக்கியங்கள் என்று சொல்லலாம்.




>இராமனும் இலக்குமணனும் சகோதரர்கள்

## 1. 3

கீழே கொடுக்கப்பட்டுள்ள வாக்கியங்களில் இணைக்கப்பட்டுள்ள பெயர்ச்சொல் தொடர்கள், அவ்வாக்கியங்களில் வரும் வினைச்சொல் தொடர்களின் பகுதிகளாகும்.

மணி வீட்டிற்குப் போனன் (13)

பாலு நாடகத்திற்குப் போனன் (14)

இவற்றில் வரும் வீட்டிற்கு, நாடகத்திற்கு என்ற தொடர்கள் —உம் என்ற இணைப்புச் சொல்லியனைக் கொண்டு இணைக்கப்பட்டுள்ளன. அதோடு போனன் என்ற வினைமுற்றானது பன்மையாக்கப்பட்டுப் போனர்கள் என்றாகிறது.

---

3. Bruce L. Liles, *An Introductory Transformational Grammar*, [1971], U. S. A. (P. 83—90)




> மணி வீட்டிற்கும் பாலு நாடகத்திற்கும் போனர்கள்

### 1. 4 மாற்று அமைப்பு

மாற்று அமைப்பு கொண்ட இணையமைப்பு வாக்கியங்களில் —ஆவது, —ஆகிலும் போன்ற இணைப்புச் சொல்லியன்கள், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வாக்கியங்களை இணைப்பதற்குப் பயன்படுத்தப்படுகின்றன எடுத்துக்காட்டாக,

நான் போவேன் (15)

அவன் போவான் (16)

என்ற இரு வாக்கியங்களை —ஆவது என்ற இணைப்புச் சொல்லியனைக் கொண்டு இணைப்பதன் மூலம் நமக்கு

நானுவது அவனுவது போவோம் (17)

என்ற இணையமைப்பு வாக்கியம் கிடைக்கிறது. அஃதாவது இணைக்கப்படும் வாக்கியங்களில் வரும் பெயர்ச் சொல் தொடர்களை —ஆவது என்ற இணைப்புச் சொல்லியனுல் இணைத்தும், அவற்றில் வரும் போவேன், போவான் என்ற முற்று வினைகளைப் பன்மையாக்கியும் இந்த இணையமைப்பு வாக்கியம் பெறப்படுகிறது.




>நானுவது அவனுவது போவோம்

இவ்வாறு வாக்கியங்களையோ அல்லது பெயர்ச்சொல் தொடர்களையோ சில இணைப்புச் சொல்லியன்களைக் கொண்டு இணைத்து மேலே கூறப்பட்ட இருவகையான இணையமைப்பு வாக்கியங்கள் சில மாற்றல் விதிகளுக்குட்பட்டு [Transformational rules] பெறப்படுகின்றன.

**சுருக்கெழுத்துக்களின் விளக்கம் :**

*வா—வாக்கியம்*
*பெ—பெயர்ச்சொல்*
*வி—வினை*
*பெ. தொ—பெயர்ச்சொல் தொடர்*
*வி. தொ—வினைச்சொல் தொடர்*
*இ. சொ—இணைப்புச் சொல்லியன்*
*வே—வேற்றுமை*
*நா. வே—நான்காம் வேற்றுமை*

---

# சங்க இலக்கியத்தில் கூகையும் குராலும், குடிஞையும் ஊமனும் ஆண்டலையும்

(The barn owl, The Collared scops owl, Indian great horned owl, Brown fish owl, Hawk owl.)

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

(சிலம்பு-சசு. பரல்-கூ. ௫௨௨ஆம் பக்கத் தொடர்ச்சி)

வடநாட்டில் வாழும் திராவிடப் பழங்குடி மக்களிடையே ஆந்தையினப் பறவைகளைச் சுடுகாட்டுக்குரிய பறவைகளாகக் கருதும் கதைகள் வழங்குகின்றன. சங்க இலக்கியத்திலும் பிற்கால இலக்கியத்திலும் சுடுகாட்டில் ஆந்தையினப் பறவைகள் கூவுவதாகக் கூறும் வழக்கைக் காணலாம். ஆண்டலை என்ற ஆந்தையினப் பறவையின் பெயர்கூட, பழந்திராவிட மக்களிடையே வழங்கும் ஆந்தை தோன்றிய கதையினடிப்படையில் தோன்றி யிருக்கலாம். பைகர்கள் என்ற திராவிடப் பழங்குடி மக்கள் ஆந்தையைப்பற்றி ஒரு கதையைச் சொல்லுகிறார்கள். ஒரு காதலன் அம்மையால் மடிந்துவிடவே அந்த ஆளை ஒரு பெரிய முதுமக்கள் தாழியில் வைத்துப் புதைத்தனர்—ஆனால் அவன் கண்ணும் மண்டை யோடும் அழியாமலே இருந்தன. அவனுடைய மண்டை யோட்டை ஒரு தேவன் ஆந்தையாக மாற்றினான். அந்த ஆந்தை தாழியின் உள்ளே இருந்து கூவுவதைக் கேட்டு அவனுடைய காதலி பயந்து ஓடுகின்றாள். இந்தக் கதையில் ஆணின்தலை மண்டையோடு ஆந்தையாக மாறுவதாகக் கூறினதைக் கவனிக்கவேண்டும். தமிழில் ஆண்டலை என்பதற்கும் இதே பொருள் இருப்பதைக் காணலாம். புறநானூறு 238ஆம் பாட்டில் 'கவிசெந்தாழிக் குவிப்புறத்திருந்த' பறவைகளில் கூகையும் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். ஆதலின் ஆண்டலை என்ற தமிழ்ப்பெயர் பழந்திராவிட மக்களிடையே வழங்கும் ஆந்தையினப் பறவையின் தோற்றக் கதையுடன் நெருங்கிய தொடர்புடையது என்று தெரிகின்றது.

**ஆந்தை :**

முற்பட்ட சங்க இலக்கியத்தில் ஆந்தையைப் பற்றி யாதொரு பாடலும் கூறவில்லை. பொதுவாக எளிதிலே நாம்

காணும் பறவைகள், பழகிய விலங்குகளைப் பற்றிச் சங்க நூல்கள் விளக்கமாகப் பேசுவதில்லை. வீட்டில் வளர்க்கும் விலங்குகள், பறவைகளைப்பற்றிய விளக்கம் சங்க நூல்களில் மிகவும் குறைவே. அதனால் வீடுகளின் அருகில் எளிதில் கண்டு தெரிந்த ஆந்தையைப்பற்றிய செய்தியும் சங்க நூல் களில் சொல்லப்படவில்லை.

> ''மன்ற முதுமரத் தாந்தை குரலியம்பக்
> குன்றக நண்ணிக் குறும்பிறந்து—சென்றவர்
> கள்ளியர் தம்மையர் போலு மடுத்தடுத்
> தொள்ளிய தும்மல் வரும்'' —ஐந்திணை எழுபது-38

> ''ஆந்தை குறுங்கலி கொள்ள நம்மாடவர்''— கைந்நிலை-21

ஐந்திணை எழுபதிலும் காரைக்காலம்மையார் பாடல்களிலும் பிற்கால நூல்களிலும் ஆந்தையைப்பற்றிச் சொல்லப்பட்டிருப் பதைக் காணலாம். இந்த ஆந்தை முதிய மரங்களில் பொந்துகளில் வாழும் என்று பறவை நூலார் கூறுவர். ஐந்திணை எழுபதும் அகநானூறும் மன்றத்திலிருந்த முது மரத்தில் ஆந்தை இருந்ததாகக் கூறியுள்ளதைக் காணலாம். 'ஆந்தை பாந்தியிருப்ப என்று கலிங்கத்துப்பரணி ஆந்தை பதுங்கி வாழும் இயல்பைக் குறிப்பிடுகின்றது. இந்த ஆந்தையைப் புள்ளி ஆந்தையென்று நாட்டு மக்கள் அழைப்பர். நிகண்டுகளில் ஆந்தையைக் கோட்டானி லிருந்தும் கூகையிலிருந்தும் வேருகக் கூறுவதைக் காணலாம். ஆந்தையின் பெயர் இருடி, பிங்கலை, கின்னரம் என்று எல்லா நிகண்டுகளும் கூறியுள்ளன. ஆந்தையை முக்காலம் உணர்ந்த ஞானியாகக் கருதி இருடி என்று அழைத்தனர். மேல்நாடு களிலும் ஆந்தையை ஞானம் நிறைந்த பறவை (Bird of wisdom) என்று கருதுவதுண்டு. அகநானூற்றில் 260ஆம் பாடலில் 'முதுபுள்' என்று ஆந்தை அழைக்கப்படுவதைக் காணலாம். இங்கு முது என்ற சொல் பேரறிவு என்ற பொருளில் வழங்கியுள்ளது. முதுமையான என்ற பொருளில் வழங்கவில்லை முதுவாய்ப்பாண' என்ற புறநானூற்று (319) வரியிலும் முது என்ற சொல்லிற்குப் பேரறிவு என்று பழைய உரை கூறப்பட்டுள்ளதைக் காணலாம். ஆந்தையை முதிய மரத்தில் வாழும் பேரறிவுடைய பறவை என்று சங்ககாலத்தில் கருதினர். ஆந்தையைப்பற்றி இத்தகைய உயர்ந்த கருத்து சங்ககாலத்தில் இருந்திருக்கலாம். சிறைக்குடி ஆந்தையார், கொட்டியூர் நல்லாந்தையார், பிசிராந்தையார், மன்னெயில் ஆந்தை என்ற பெயர்களுடைய புலவர்களும் தலைவர்களும்

சங்ககாலத்தில் இருந்தனர். பிசிராந்தையார் என்ற பெயரில் ஆந்தை என்ற சொல் ஆதன் தந்தை என்ற இருசொற்கள் சேர்ந்ததால் பிறந்தது என்று உரையாசிரியர்கள் கருதினர். ஆனால் ஐராவதம் மகாதேவன் அவர்கள் செய்த பழங்காலக் கல்வெட்டு ஆராய்ச்சியின்படி ஆதன்+அந்தை யென்பதே ஆந்தை யென்று வருமென்று கொள்ளவேண்டியுள்ளது. அந்தை என்பது தனியே உருபாகக் கொற்றனந்தை என்ற பெயர்களில் கல்வெட்டுகளில் காணப்படுவதை அவர் எடுத்துக் காட்டியுள்ளார். ஆந்தையை இருடி என்றும் ஞானி என்றும் கருதினதால் புலவர்கள் ஆந்தை யென்ற பெயரைச் சூடிக் கொண்டார்கள் என்று கருதலாம். ஓதல் ஆந்தையார் என்ற புலவர் குறுந்தொகையிலும் ஐங்குறு நூற்றிலும் சில பாடல்கள் பாடியுள்ளார். ஓதஞானி என்ற புலவர் குறுந்தொகையில் ஒரு பாடல் பாடியுள்ளார். இந்த இரு புலவர்களும் ஓதி உணர்ந்த ஞானிகளாயிருப்பர். ஆதலின் ஒருவரை ஓதல் ஆந்தையார் என்றும் மற்றொருவரை ஓத ஞானியார் என்றும் அழைத்தனரெனக் கருதலாம். ஆந்தை யென்ற பெயர் ஆதன்+ஆந்தை என்ற இருசொற்கள் சேர்ந்தும் உண்டாகி யிருக்கலாம். ஆதன் என்ற சொல் சங்ககாலத்தில் சேர அரசரும் பிறரும் சூடிக்கொண்ட இயற் பெயராகும். ஆதன் என்ற சொல் பிற்காலத்தில் அறிவிலி என்ற பொருள் பெற்றிருந்தாலும் சங்ககாலத்தில் உயர்ந்த பொருளுடன் வழங்கியிருக்கவேண்டும். இல்லையேல் சேர மன்னர்கள் இப் பெயரைச் சூடிக்கொண் டிருக்கமாட்டார்கள். ஆதன் என்ற சொல் அறிவுடையவன் என்ற பொருளில் சங்ககாலத்தில் வழங்கியிருக்கலாம். உயர்திணை ஊமன் என்ற பெயரையே ஒருவகை ஆந்தையினப் பறவைக்குப் பெயராக வழங்கினது போல ஆந்தை யென்ற உயர்திணைப் பெயரை அஃறிணைப் பறவைக்கு வழங்கியிருக்கலாம். பிறகு இந்தப் பறவையின் பெயரையே புலவர்களும் பூண்டிருக்கலாம். கடுவன், மந்தி என்ற குரங்கின் பெயர்களை மனிதர்கள் சூடிக்கொள்வதைச் சங்ககாலத்தில் காணலாம்.

காரியென்ற பறவையின் பெயரைச் சூடிக்கொண்ட புலவர் களையும் மன்னர்களையும் காணலாம். ஆதலின் ஆந்தையின் பெயரைப் பூண்டதில் ஐயப்பட வேண்டியதில்லை. தெலுங்கு மொழியில் ஆந்தையை 'பகடிகண்டெ என்றழைக்கின்றனர். ஆந்தை பொந்தில் இருக்கும்போது கழுத்தை திருப்பி வளைத்து வளைத்து உற்றுப்பார்ப்பது வேடிக்கை காட்டுவது போல இருக்கும். அதனால் பகடி செய்வதுபோல இருப்ப

தாகக்கருதி, தெலுங்கில் இந்தப் பெயர் வழங்கினர். திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகத்தில் காரைக்காலம்மையார் 'பருந்தொடு கூகை பகண்டை யாந்தை குட்டியிட முட்டை கூகை பேய்கள்' என்று பாடியுள்ள பாட்டு வரியில் பகண்டை என்ற பெயர் ஆந்தையினப் பறவையைக் குறிப்பதைக் காணலாம். இந்தப் பகண்டை என்ற பெயர்க்கும் 'பகடி கண்டெ' என்ற தெலுங்குப் பெயர்க்கும் உள்ள ஒற்றுமையைக் கவனிக்கவேண்டும். இந்தப் பகண்டை என்ற பறவை நாட்டு ஆந்தையைப்போல உள்ள காட்டில் வாழும் ஆந்தையைக் குறிக்கலாம். நாட்டு ஆந்தையைப்போல அளவிலும் உருவிலும் ஒத்து இருந்தாலும் இந்தக் காட்டு ஆந்தைக்கு உடலில் புள்ளிகள் இரா. வரிகள் இருக்கும். நாட்டு ஆந்தையை The Spotted owlet என்று ஆங்கிலத்திலும் Athene brama என்று பறவை நூலிலும் கூறுவர். காட்டு ஆந்தையை Barred Jungle owlet என்று கூறுவர். இதையே பகண்டை என்று காரைக்காலம்மையார் குறிப்பிட்டிருக்கலாம். பிற்காலத்தில் நிகண்டுகளில் பகண்டை என்ற பெயர் வாத்து போன்ற நீர்ப்பறவையைக் குறித்து வழங்கியிருப்பதையும் காணலாம். ஆந்தையினப் பறவைகளைச் சுடுகாட்டில் நடமாடுவதாகவும் மனிதரின் மண்டையையும் உடலையும் தின்பதாகவும் கூறிய கற்பனைகள் காரைக்காலம்மையார் காலத்திலே தொடங்கிவிட்டது. மலையாளத்தில் நாட்டு ஆந்தையைப் 'புள்ளிநத்து' என்றழைப்பர்.

நிகண்டுகளில் ஆந்தையைத் தனிப்பறவையாகவே குறிப்பிட்டிருக்கும்போது கூகை, குடிஞை, குரால் ஆகியவற்றைக் கோட்டான் என்றே ஒரே பறவையாகக் கருதினர். இப்பறவைகள் ஆந்தையினத்தில் வெவ்வேறு பறவைகள் என்பதை நிகண்டாசிரியர்கள் கருதவில்லை. தொல்காப்பிய மரபியலில் (613) 'மரம்பயில் கூகையைக் கோட்டான்' என்று மாறுபட்டு உலகத்தார் வழங்குதலின் அது வழுவென்று கடியப்படாது என்று கூறியுள்ளதைக் காணலாம். ஆதலின் தலையில் கோடு அற்ற கூகையையும் கோட்டான் என்று மாறுபட்டு உலகத்தார் வழங்கினதைக் காணலாம். கோழிக்கும் கூகைக்கும் பெண்பால் அளகெனப்படும் என்று தொல்காப்பிய மரபியல் (600) கூறியுள்ளது. பேராந்தையின் பெயராக சகோரம், நிலாமுகி என்ற பெயர்கள் கூறப்பட்டுள்ளன. மலையாளத்திலும் ஊமன் எனப்படும் ஊமைக் கோட்டான் நிலாவின் கதிர்களை உண்பதாகக் கூறுவதுண்டு. ஆதலின் பேராந்தையான சகோரமும் நிலாமுகியும் ஊமனுகும். பிங்கலந்தை நிகண்டில் பெருங்கோட்டான் பெயர் கௌசிகம்,

ஊமன், குடிஞை, கூகை, பெரும்புள் என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் இவைகளில் கூகையைப் பெருங்கோட்டான் என்றோ பேராந்தை என்றோ கொள்ளமுடியாது. கூகையென்பது சாக்குருவி என்பதைப் புறநானூறு தெளிவாகக் குறிப்பிட்டுள்ளது. பெரும்புள் என்ற பெயர் பேராந்தைக்குப் பெயராகக் காணப்படுகின்றது. ஆந்தைக்குப் பிங்கலை என்ற பெயர் உள்ளதாக நிகண்டுகள் கூறும். ஆந்தையின் பிங்கல நிறம் காரணமாக (Brown) பிங்கலை என்ற பெயர் வழங்கியுள்ளது. மராத்திமொழியில் பிங்கலா என்றழைக்கின்றனர். ஆந்தைக்குத் தலையில் கொம்புகள் கிடையா. பிற்காலத்து நிகண்டுகள் ஆந்தையை 'கூன்' என்றுமழைக்கின்றன.

ஆந்தையினப் பறவைகளில் ஆறுவகை சங்க நூல்களில் சொல்லப்பட்டுள்ளன என்று கருதலாம். கூகையைக் சாக்குருவியென்று கருதினர். ஊமனை, குழந்தையைத் தாலாட்டுவதாகக் கருதினர். கூகையும் குடிஞையும் சாவைத் தரும் பறவைகளாகக் கருதினர். ஆந்தையைப் பேரறிவுடைய பறவையாகக் கருதினர். கூகையை முட்டாளாகக் கருதினர். தேவாரத்தில் 'கூகையம்மாக்கள்' என்று கூறுமிடத்தில் இந்தப் பொருளில் வருகின்றது வடஇந்தியாவில் முட்டாளைக் கூகையின் மகன் என்று இழித்துக் கூறுவதைக் காணலாம். கலித்தொகையிலும் ஆண்டலைக் கீன்ற பறழ்மகனே' என்று கூனி குறளனைப் பழித்துக் கூறுவதைக் காணலாம் இந்த இடத்தில் முட்டாள் என்ற பொருள் இருப்பதாகக் கருதலாம். ஆந்தையினப் பறவைகளில் சில கெட்ட சகுனமாகவும் சில நல்ல சகுனமாகவும், ஒன்று அறிவாளியாகவும், மற்றொன்று முட்டாளாகவும் கருதப்பட்டதைக் காணலாம். சங்க காலத்திலேயே ஆந்தையினப் பறவைகளை நன்கு கண்டுணர்ந்து கூகை, குரால், குடிஞை, ஊமன், ஆண்டலை, ஆந்தை ஆகிய ஆறுவகைப் பறவைகளைக் கூறினர் என்பதில் ஐயமில்லை.

எடுத்தாளப்பட்ட ஆங்கில நூல்கள்.

1. Handbook of the Birds of India and Pakistan—Salim Ali and S. Dillon Ripley—Volume-3. O. U. P. 1969. 2. A guide to the Birds of Ceylon—G. M. Henry—O. U. P. 1955. 3. Tamil—Brahmi Inscriptions—Iravatham Mahadevan—Department of Archaeology, Madras, 1970. 4. Sema Nagas—J. H. Hutton—O. U. P. 5. Dravidian Etymological Dictionary—T. Burrow and M. B. Emeneau—O. U. P. 6. Myths of Middle India—Verrier Elwin—O. U. P.

— — —

# ஆய்வுக்கோவை - ஓர் திறன் ஆய்வு

(3)

(பேராசிரியர், ஆ. சிவலிங்கனர், மயிலம்)

## கோவலன்

ஆய்வுக்கோவையில் "கோவலனும் மாதவியும்" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை காணப்படுகின்றது. கோவலன் கண்ணகியைப் பிரிந்து மாதவிபால் சென்று அவள் மனை யிலேயே தங்கிவிட்டதற்குக் காரணம், 'கோவலனுக்கிருந்த கலையார்வமே' என்று பிறர் கூறும் கருத்தினை மறுப்பது கட்டுரையாசிரியரின் நோக்கம். கட்டுரை முடிவில் கோவலன் மாதவிபால் சென்றமைக்கு இரண்டு காரணங்கள் எழுதி யுள்ளார்.

> "கையில் பொன் இருந்தது முதற் காரணம்; அக்காலச் சமுதாயத்தில் அரசர் முதல் பெருஞ் செல்வர் யாவரும் மேற்கொள்ளும் பரத்தையர் ஒழுக்கம் இருந்தது இரண்டாவது காரணம்."

என்று எழுதியுள்ளமை முற்றும் பொருத்தமே. கட்டுரை முடிபு நன்றாக உள்ளது. ஆனால், கோவலன் கலையார்வம் இல்லாதவன் என்று கொண்டு அதற்கு அவர் காட்டும் காரணங்கள் பொருந்துவனவாக இல்லை. அவர் காட்டும் காரணங்கள் :

1. கோவலன் கலையார்வம் உள்ளவன் என்பதைத் தெரிவிக்கும் வகையில் இளங்கோவடிகள் அவனுக்கு யாதோர் அடைமொழியும் கொடுத்துக் கூறவில்லை.

2. கதைத் தொடர்பில்வரும் மாடலன், கோசிகமாணி முதலிய உறுப்பினர் யாவரும் கோவலன் கலையார்வம்பற்றிக் குறிப்பிடவில்லை.

3. விஞ்சையர் கண்டு மகிழ்ந்த மாதவியின் ஆடல் பாடல்களில் கோவலன் ஆர்வம் காட்டி மகிழாமல் ஊடல் கொள்கிருன் என்ருல் அவன் கலையார்வம் உள்ளவன் என்று எப்படிச் சொல்ல முடியும்?

இனி இவைபற்றிக் காண்போம்.

1. கோவலனின் கலையார்வத்தைக் குறிக்கும் அடைமொழி யாதும் இளங்கோவடிகளால் கூறப்படவில்லையென்பது உண்மை. ஆனல் அடைமொழி கொடுத்துக் கூறித்தாஞக வேண்டும் என்பது சட்டமா என்ன? செய்யுள் நடையில் எதுகை மோனைக்கேற்ப அடைமொழிகள் வருவது இயல்பு. அதனுல் கலையார்வத்தைக் காட்டும் அடைமொழிகள் வந்தேயாகவேண்டும் என்பதில்லை. அப்படி அடைமொழியுடன் வரத்தான் வேண்டும் என்ருல் மாதவிக்கும் வரவேண்டுமே? மாதவி ஆடல் பாடலில் வல்லவள்; அவற்றையே தொழிலாகக் கொண்டவள். அவற்ருல்தான் கோவலனை மகிழ்வித்தவள். அப்படிப்பட்டவளையே அவைபற்றிய அடைமொழி கொடுத்து இளங்கோவடிகள் யாண்டும் கூறவில்லை. ''மாதவி மரபின் மாதவி'' (சிலப். 6 : 69.) என்ற ஓரிடம் தவிர மாதவிக்கு அவள் கலைபற்றிய அடைமொழியேயில்லை. அதுவும் மாதவியின் வரலாறுபற்றியதாதலின் அடைமொழி என்பதற்கில்லை. ''மாமலர் நெடுங்கண் மாதவி'' (சிலப். 6 : 176, 13 : 49.) ''மங்கல மடந்தை மாதவி'' (சிலப். 15 : 40.) என்பனவாகத்தான் குறிப்பிட்டாரே தவிர ''ஆடல் வல்ல மாதவி'' என்பதுபோலக் கூறவில்லையே? அதனுல் கோவலனைக் கலைபற்றிய அடைமொழியுடன் அடிகள் கூருமையால் அவன் கலையார்வம் இல்லாதவன் என்பது பொருந்தாது.

2. மாடலன் கோவலனை மதுரைக்கேகும் இடைவழியில் சந்தித்தபோது அவன் கண்ணகி நல்லாளுடன் பிரிந்துவந்த நிலைக்கு இரங்கியவனுய்க் கோவலனின் கருணையுள்ளத்துக்குச் சான்ருக முன்னிகழ்ச்சிகள் சில சொல்லி இரக்கப்பட்டபோது கலையார்வம்பற்றிக் குறிப்பிடவேண்டும் என்பது என்ன முறை? அன்றியும் கலையார்வமே அவனைக் கெடுத்தது ஆதலின் அதுபற்றிக் குறிப்பிடாமையே அப்போதைய நிலைக்கு ஏற்றதும் ஆகும்.

கோசிகமாணி கோவலனின் கலையார்வம்பற்றிக் குறிப்பிடவில்லையென்பதும். மாதவி அவனிடம் கோவலனுக்கு எழுதியனுப்பிய ஓலையிலும் அதுபற்றிக் குறிப்பிடவில்லை என்பதும் கோவலன் கலையார்வம் இல்லாதவன் என்பதற்குச் சான்ருகா. உள்ளவன் என்பதற்கே சான்ருகும். கோவலன் மாதவிபால் ஊடல் கொள்வதற்கே அவள் ஆடல் பாடல்தாம் காரணம். பொதுமேடையில் அவள் அவற்றைப் பிறர்க்கு வழங்கியது அவனுக்கு வெறுப்பை யுண்டுபண்ணியது. தன் ஒருவனுக்கே அவை மகிழ்வூட்ட வேண்டும் என்றெண்ணிவிட்டான். ''எனக்கே யிவை காமத்தையூட்டும் இன்ப உணர்வை எழுப்பு

கின்றன என்ருல் இப்படித்தானே பிறர்க்கும் ஆகும்'' என்று எண்ணிய எண்ணமே ஊடற்குக் காரணம். அவன் ஆடல் பாடல் கலைகளை நன்கு அறிந்திருந்ததாலேயே அவ்வாறு எண்ணினன். எனவே, கோவலன் பிரிவுக்கு அடிப்படைக் காரணம் தன் ஆடல் பாடல் கலையும் அவற்ருல் உணர்த்தப்படும் பொருளுமே என உணர்ந்த மாதவி, அவைபற்றிக் குறிப்பிடாதது முறை தானே? கோசிகமாணியும் எப்போதும் மாதவி வீட்டில் கிடப்பவன் ஆதலின்—கோவலன் குணம்பற்றித் தெரிந்தவனுதலின் அவனும் குறிப்பிடவில்லை.

3. இந்திர விழாக் காணவந்த விஞ்சையர் விண்ணவர் யாவரும் கண்டு மகிழ்ந்த மாதவியின் ஆடலைக் கோவலன் கண்டு மகிழாமல் ஊடல்கொண்டான் என்பதும் பொருந்தாது. அவனும் மகிழ்ந்தவனே. அவன் மகிழ்ந்தாலும் தனக்கு இன்பம் செய்யும் ஆடல் பிறர்க்கும் இன்பம் செய்தலையே வெறுத்தான். அப்பொருமையே ஊடற்குக் காரணம். இதை இளங்கோவடிகள் வெளிப்படையில் கூறவில்லை. உரையாசிரியர்களே சுட்டிச் சென்ருர்கள். இளங்கோவடிகள்,

> "..................................வானவன் விழவும்
> ஆடலும் கோலமும் அணியும் கடைக்கொள
> ஊடற் கோலமொ டிருந்தோன்" (கடலாடு. 73-75)

என்றுதான் கூறினர். இதன் பொருள், "இந்திர விழாவும், மாதவி யாடலும், அதற்கேற்ற கோலமும், ஆடுங்கால் பிறக்கும் அழகும் முடிதலால் வெறுப்போடிருந்த கோவலன்" என்பதாம். அரும்பதவுரைகாரரும் அடியார்க்கு நல்லாரும் கோவலன் ஊடுதற்குக் காரணம் "விழா முடிதலால் வந்த வெறுப்பு" என்று முதலிற் கூறிப் பின்னரே கோவலனின் பொருமை யுணர்வைக் குறிப்பிட்டனர்.

> "இனி இவளாடலும் கோலமும் தனது அறிவு நிறையோர்ப்புக் கடைப்பிடிகளைக் கைக்கொண்டு விடுதலாலே பிறர்க்கும் இவ்வாறும் என்னும் வெறுப்போடிருந்தான் எனினும் அமையும்"

என்பது அடியார்க்குநல்லார் இரண்டாவதாக எழுதியது.

> "இவள் ஆடலிற் காலம் நீட்டித்தலாலும் பலரும் இவளைப்பற்றிப் பார்த்தலிற் பொருமையாலும் வந்த வெறுப்புமாம்"

என்றார் அரும்பதவுரைகாரர். எனவே விஞ்சையர் மகிழ்ந்த கலையைக் கோவலனும் கண்டு மகிழ்ந்தே பின் ஊடினான் என்னலாம்.

இனிக் கோவலன் இரு கலைகளிலும் வல்லவனே என்பதைக் காணலாம்.

கோவலன் தான் ஆடும்படியாக ஆடற்கலையில் வல்லவன் இல்லையென்றாலும் ஆடலையுணரும் அறிவுடையவனாகவே யிருந்தான். கோவலன் கானல்வரிப் பாடல் காரணமாகப் பிரிந்தபோது மாதவி, வசந்தமாலைமூலம் எழுதியனுப்பிய ஓலையைக் கண்ட அவன், வெறுப்புடன் வசந்தமாலையிடம் கூறியபோது, ஆடற்கலைக்குரிய கண்கூடுவரி முதலாக எடுத்துக்கோள்வரி யிறுதியாக உள்ளவற்றை விவரித் துள்ளான். முடிவாக,

> "ஆடல் மகளே யாதலின்...............
> பாடு பெற்றன அப்பைந்தொடி தனக்கு"
>
> (வேனில். 109 : 10)

என்றான். இவ்விடத்து அடியார்க்குநல்லார் எழுதிய சிறப்பும் காணத்தக்கது.

> "இதனாற் கூறியது முன்புதான் இவளொடு கூடியும் ஊடியும் செல்கிற காலத்து இங்ஙனம் நடித்த நடிப்பை நாடக வுறுப்பாகிய கண்கூடு முதல் எடுத்துக்கோள் ஈறாகவுள்ள வரியெட்டி னோடும் சிலேடித்துக் கூறிய கோவலன் நாடக மகளிர்க்கு இந்நாடகம் பிறந்துடைமையன்றோ வெனச் சொல்லி ஓலையை மறுத்தான் என்பது"

என்றெழுதியுள்ளார். எனவே ஆடற்கலை யுணர்வுடையவன் என்பதும், அதில் ஆர்வம்கொண்டே மாதவிபால் இருந்த போதெல்லாம் அனுபவித்து மகிழ்ந்து வந்தான் என்பதும் அறியலாம்.

இனிப் பாடல் கலையிலும் வல்லவனாகவும் ஆர்வம் உள்ள வனாகவும் இருந்தான் கோவலன் என்பதும் உண்மையே. கானல்வரிப் பாடலைப் பாடியதும் அப்போது யாழும் வாசித் ததும் சான்று பகரும். அன்றியும் மதுரைக்கேகும் இடை வழியில் அந்தரிகோலம் பாடும் பாணருடன் யாழிசைத்துப்

பாடினன் (புறஞ்சேரி. 104-113) என்று அடிகள் கூறியிருப்பதாலும் அறியலாம்.

கட்டுரை யாசிரியர் கலை என்பது ஆடல் பாடல் என்ற இரண்டு மட்டுமே எனக் கொண்டு எழுதியுள்ளார். ஊடற் கோலமோடிருந்த கோவலன் உவப்ப மாதவி, உடனே தன்னைப் பலவகையிலும் அணி செய்துகொண்டு (கடலாடு. 75-108) கூடலும் ஊடலும் அளித்தாள் என்று இளங்கோவடிகள் கூறியிருத்தலை நோக்கும்போது அவள் அணிவகைகளைக் கண்டவன் அவள் அழகுக்கலையை உணராமலா இருந்திருப்பான்? உணரவில்லை யென்றால் அவளுடன் ஊடலும் கூடலும் அவள் தரக்கொள்ள முடியுமா? உவப்பு வருமா?

மாதவி வசந்தமாலையிடம் கொடுத்தனுப்பிய ஓலையில் உள்ள செய்திகள் யாவும் பிரிவுத்துயர்பற்றிய காமச் செய்திகளாம். அவை அழகுபட விவரிக்கப்பட்டன.

மனையறம்படுத்தகாலைக் கோவலன், கண்ணகியைப் பாராட்டிய சொற்கள் யாவும் கண்ணகிபால் கொண்ட காதலொடு கூடிய காமமிகு சொற்களே. "மாசறுபொன்னே (கண்ணுக்கினிமை), வலம்புரிமுத்தே (ஊற்றின்பம்), காசறு விரையே (உயிர்ப்பின்பம்), கரும்பே (சுவையின்பம்), தேனே (ஓசையின்பம்)" எனப் பாராட்டினன் என்றால் அவன் கண்ணகிபால் கொண்ட காதலால் அவள் ஐம்புலன்களுக்கும் விருந்தாவாள் என்பதை உணர்ந்துள்ளான் என அறியலாம். எனவே காதலொடு கூடிய காமக்கலையிலும் அவன் வல்லவனே என்னலாம்.

எனவே கோவலன் கலையார்வம் இல்லாதவன் என்பது எட்டுணையும் பொருந்துவதில்லை. கலையார்வத்தைக் குறிக்கோளாகக் கொண்டவன் இல்லை என்று சொல்லிக்கொள்வதால் குறையில்லை. கட்டுரையாசிரியர் கலையார்வம் காரணமாக மாதவிபால் செல்லவில்லை என்பது மட்டில் பொருத்தமே. ஆனால் கலையார்வத்தால்தான் மாதவிபால் விடுதல் அறியா விருப்பினனாயினன் என்னலாம்.

## பள்ளிக்கல்வி இயக்குநரின் 12-9-1971 நாளிட்ட ந. க. எண் 205388. டபிள்யு 1/71

# புத்தகம் படிக்கும் பழக்கத்தை வளர்ப்பதுபற்றிய செயல் முறைகள்—நகல்

## சுற்றறிக்கை

கல்வி — பள்ளிக்கல்வி — வீட்டுக்கொரு நூல் நிலையத் திட்டம்- பள்ளிகளில் ஆசிரியர்களிடையே ஏற்படுத்தல் — மாணவ மாணவியரிடையே புத்தகம் படிக்கும் பழக்கத்தை வளர்த்தல் சம்பந்தமாக,

வீடுதோறும் கலையின் விளக்கம்
வீதிதோறும் இரண்டொரு பள்ளி
நாடுமுற்றிலும் உள்ளன ஊர்கள்
நகர்களெங்கும் பலபல பள்ளி.

என்று அமரகவி பாரதியார் பாடியது உண்மையாகும் வகையில் பள்ளியில்லாத ஊர்களே இல்லை என்ற நிலை தமிழ்நாட்டில் ஏற்பட்டு விட்டது. தமிழக அரசு கல்விக்காக 81.8 கோடி ரூபாய் செலவு செய்வதை அனைவரும் அறிவோம். கற்ற கல்வியைக் கருத்தில் இருத்தி அதனைப் பயனுள்ளதாகச் செய்துகொள்ள கற்றோர் அனைவர்க்கும் தொடர்ந்து படிக்கும் வழக்கம் ஏற்படவேண்டுமென்பது அவசியம். இதனைக் கருத்தில் கொண்டே பேரறிஞர் அண்ணா அவர்கள் 'வீட்டுக் கொரு நூல் நிலையம்' தேவைபற்றி வற்புறுத்தினர். பல திட்டங்களைச் செயல்படுத்தி வெற்றி கண்ட ஆசிரியர்கள் "வீட்டுக்கொரு நூல் நிலையம்" என்பதையும் மேற்கொண்டு செயல்படுத்த விரும்புகிறேன். மாணவர்களிடையேயும் இத்திட்டம் புகுத்தப்பட வேண்டுமெனினும் முதன்முதலில் ஆசிரியர்களிடையே இது ஏற்பட விழைகிறேன்.

ஐக்கிய நாட்டுக் கல்வி விஞ்ஞான கலாச்சார நிறுவனம் (யுனெஸ்கோ) 1972ம் ஆண்டினைச் சர்வதேச புத்தக ஆண்டாகக் (International Book Year) கொண்டாட வேண்டுமென வெளியிட்டுள்ளது. எனவே, வீட்டுக்கொரு நூல் நிலையத் திட்டம் ஆசிரியர்களிடையே இந்த ஆண்டு, அறிமுகப்படுத்தப்படுவதை அனைவரும் வரவேற்பர் எனப் பெரிதும் நம்புகிறேன். இத்துடன் மாணவ மாணவியரிடையே புத்தகம் படிக்கும் பழக்கத்தை வளர்க்கும் திட்டமும் பள்ளிகளில் செயல்படுத்தப்பட வேண்டும். இவ்விரு திட்டங்களும் கல்வியின் வளர்ச்சிக்கும் உறுதுணையாக இருக்கக் கூடியவை.

இத்திட்டங்களைப்பற்றிய விளக்கங்கள் இத்துடன் இணைக்கப் பட்டுள்ளன. இத்திட்டங்கள் வெற்றிக்கான ஆசிரியர்களின் ஆர்வத்தையும் உற்சாகத்துடன் கூடிய ஒத்துழைப்பையும் பெரிதும் எதிர்பார்க்கிறேன். திட்டத்தின் வெற்றிக்குத் தேவையான வகையில் பள்ளிகளில் அதற்கான விதிகளை விரிவுபடுத்தி அமைத்துக்கொள்ளலாம். இத் திட்டங்களைப் பள்ளிகளுக்கு விளக்கி அவற்றினைச் செயல்படுத்த ஆவன செய்யக் கல்வி அலுவலர் அனைவரும் முயற்சி கொள்ளவேண்டும்

இதற்காகப் பள்ளி அலுவலர்கள் மேற்கொண்டுள்ள முயற்சியும் நடவடிக்கையும்பற்றி இயக்குநருக்கு 1972 அக்டோபர் இறுதிக்குள் ஓர் அறிக்கை அனுப்பப்படவேண்டும்.

(ஒ-ம்) சை. வே. சிட்டிபாபு
பள்ளி கல்வி இயக்குநர்.

## உண்மை நகல்—திட்டம் 1

1. இது "வீட்டுக்கொரு நூல் நிலையத் திட்டம்" எனப்படும்.

2. ஒவ்வொரு ஆசிரியரும், ஆசிரியையும் தமது வீட்டில் ஒரு நூல் நிலையம் துவக்கி அதைச் சிறுக சிறுகப் பெருக்கவேண்டும்.

3. ஒவ்வொரு ஆசிரியரும், ஆசிரியையும் ஒவ்வொரு மாதமும் குறைந்தது இரண்டு அல்லது மூன்று ரூபாய்க்காவது தமக்குப் பிடித்தமான புத்தகத்தை வாங்கித் தமது வீட்டு நூல் நிலையத்தில் சேர்த்துக்கொள்வதாக உறுதி எடுத்துக்கொள்ளவேண்டும்.

4. ஆசிரியர், ஆசிரியைகள் பிற கூட்டங்களில் கலந்துகொள்ளும் பொழுது, அங்கு மாலைக்குப் பதில் புத்தகம் பெற்றுத் தம் நூல் நிலையத்தில் சேர்த்துக்கொள்ளலாம்.

5. ஒவ்வொரு உயர்நிலைப் பள்ளியிலும் பள்ளி ஆசிரியர்கள் அனைவரும் தங்கள் பள்ளி ஆசிரியர் சங்கத்தில் "வாசகர் வட்டம்" அமைத்துக்கொள்ள வேண்டும். மாதத்திற்கு ஒரு முறையோ அல்லது இருமுறையோ வாசகர் வட்டக் கூட்டத்தில் குறிப்பிட்ட ஆசிரியர் அல்லது ஆசிரியை அந்த வாரத்தில் அல்லது அந்த மாதத்தில் தாம் படித்த புதிய புத்தகத்தைப் பற்றியும் அதில் உள்ள கருத்துக்களைப் பற்றியும் பேசவேண்டும். இது மற்றவர்களும் அந்தப் புத்தகத்தைப் படிக்கத் தூண்டும்.

6. ஒவ்வொரு ஆசிரியரும், ஆசிரியையும் ஒவ்வொரு மாதமும் தமது வீட்டு நூல்நிலையத்தில் சேர்த்த புத்தகங்களின் பெயர்களை அடுத்து வரும் வாசகர் கூட்டத்தில் அறிவிக்கவேண்டும்.

7. எல்லா ஆசிரியர், ஆசிரியைகள் வீடுகளிலும் உள்ள நூல் நிலையங்களில் இருக்கும் புத்தகங்களின் பட்டியலும் அவற்றைப்பற்றிய சில குறிப்பும் பள்ளியில் எழுதி வைத்திருக்கவேண்டும். இது வாசகர் வட்டச் செயலாளர் பொறுப்பில் இருக்கலாம்.

8. ஆசிரியர் அல்லது ஆசிரியைகள் வீடுகளிலும் உள்ள நூல் நிலையங்களில் இருக்கும் புத்தகங்களின் பட்டியலும் தமது வீட்டு நூலகத்திற்கு வாங்கிய புத்தகத்தைப் படித்து முடித்த பின்னர் அதனை மற்ற ஆசிரியர்கள் அல்லது ஆசிரியைகள் படிக்கக் கொடுக்கலாம்.

9. பள்ளியிலுள்ள எல்லா ஆசிரியரும், ஆசிரியைகளும் பள்ளிக்கு அண்மையில் உள்ள பொது நூலகங்களில் உறுப்பினர்களாகச் சேர்ந்து புத்தகம் எடுத்துப் படிக்கும் பழக்கம் ஏற்படுத்தவேண்டும்.

10. பத்திரிகைகளில் அவ்வப்போது வெளிவரும் புத்தகங்களைப் பற்றிய மதிப்புரையைப் பள்ளியில் அறிவிப்புப் பலகையில் ஒட்டிவைக் கலாம். இது நல்ல புத்தகங்களைத் தேர்ந்தெடுக்க உதவும்.

11. ஒவ்வொரு ஆசிரியரும், ஆசிரியையும் தாம் படித்த புத்தகங் களின் பட்டியல் ஒன்று தேதிவாரியாக ஒரு பதிவேட்டில் எழுதிப் பள்ளியில் வைக்கவேண்டும். புத்தகம் எங்கிருந்து எடுத்துப் படிக்கப் பட்டது? வீட்டு நூல் நிலையமா? பள்ளி நூல் நிலையமா? பொது நூலகமா? அன்றி நண்பர்களிடமிருந்தா என்று அந்தப் பதிவேட்டில் குறித்துவைத்தல் நலம். இந்தப் பதிவேடு வாசகர் வட்டச் செயலாளர் பொறுப்பில் இருக்கலாம்.

12. கல்வி மாவட்டத்திற்குள் எந்த உயர்நிலைப் பள்ளியில் இந்தத் திட்டம் வெற்றிகரமாக நடத்தப்படுகிறதோ அதனை மதிப்பீடு செய்து கல்வி மாவட்ட அளவில் சுழற்கேடயம் அளிக்கலாம்.

13. ஆரம்பப் பள்ளிகளைப் பொறுத்தவரையில் இத்திட்டம் ஆசிரிய மையங்கள் வாரியாகச் செயல்படுத்தலாம். வாசகர் வட்ட நிகழ்ச்சி ஆசிரியர் மைய இடங்களிலேயே நடத்தப்படலாம். பள்ளித் துணை ஆய்வாளர் இதற்கு வேண்டிய வழிகளை ஆசிரியர் மையங்களில் மேற்கொள்ளவேண்டும்.

14. ஆண்டுக்கொருமுறை அந்த ஆண்டில் ஆசிரிய, ஆசிரியைகள் வாங்கிய புத்தகங்களை மாவட்டக் கல்வி அளவிலோ அல்லது ஆசிரியர் சங்க மைய அளவிலோ கண்காட்சியாக ஏற்படுத்தச் செய்யலாம்.

15. 'பள்ளிச் சீரமைப்பு மாநாடு' நடத்தும் சமயம் அந்த வட்டாரத்தைச் சேர்ந்த ஆசிரிய, ஆசிரியைகளின் வீட்டுக்கொரு நூல் நிலையக் கண்காட்சியும் அம்மாநாட்டில் ஏற்படுத்தலாம்.

16. இத் திட்டத்தின் வெற்றிக்கு வேண்டிய வகையிலும் மாவட்டத்திற்கேற்ற அளவிலும் இதன் விளக்கங்களைக் கல்வி அலுவலர்கள் மாற்றி அமைத்துக்கொள்ளலாம்.

17. இத்திட்டத்தின் வெற்றி ஆசிரிய, ஆசிரியைகளின் முழு ஒத்துழைப்பையும் உற்சாகத்தையும் பொறுத்துள்ளது. எனவே, அவர் களின் முழு ஆர்வமும் ஒத்துழைப்பும் எதிர்பார்க்கப்படுகின்றன.

## திட்டம்—2

### புத்தகம் படிக்கும் பழக்கத்தை வளர்த்தல்

1. மாணவ மாணவியர் பாடப் புத்தகங்களைப் படிப்பதைத் தவிர இதர நூல்களையும் படிக்கும் பழக்கத்தை ஏற்படுத்துதல் இதன் நோக்கமாகும்.

2. ஒவ்வொரு வகுப்பிற்கும் ஒரு கிழமை நூல் நிலையத்தைப் பயன்படுத்தும் தினமாக ஏற்படுத்தவேண்டும்.

3. பள்ளி துவக்கத்திலிருந்து ஒவ்வொரு வகுப்புப் பிரிவுக்கும் அந்தந்த வகுப்புத் தரத்திற்கு ஏற்றவாறு ஒரு குறிப்பிட்ட

எண்ணிக்கைப் புத்தகங்களைக் கொடுத்து வகுப்புத் தலைவன் மூலமாக மாணவ மாணவியர்க்கு வகுப்பு நூல் நிலையப் புத்தகமாக வழங்கலாம்.

4. இத்தகைய புத்தகக் கட்டுகள் வகுப்புகளுக்கு இரண்டு அல்லது மூன்று மாதத்துக் கொருமுறை மாற்றி வழங்கலாம்.

5. ஒவ்வொரு மாணவரும், மாணவியும் எத்தனை புத்தகங்கள் படித்தனர் என்பதற்கு வகுப்புப் பதிவேடு வைத்திருக்கவேண்டும்.

6. ஒவ்வொரு மாணவரும், மாணவியும் ஈராண்டில் சராசரி குறைந்தது முப்பது புத்தகங்களாவது (ஒவ்வொரு புத்தகமும் சராசரி 100 பக்கங்கள் கொண்டவை) படிக்கலாம் என்று மதிப்பிடப்படுகிறது. குறிப்பாக அறிவியல் புத்தகங்களை அதிகம் படிக்கவேண்டும்.

7. படித்த புத்தகங்களைப்பற்றிய குறிப்புகளை ஒவ்வொரு மாணவரும் மாணவியரும் எழுதி வைக்கவேண்டும்.

8. மாணவர்கள் படித்த புத்தகங்களின் எண்ணிக்கை படிப்ப தற்குத் தேர்ந்தெடுத்துள்ள புத்தகங்களின் தரம், படித்த புத்தகங்களைப் பற்றிய குறிப்புகள் எடுத்திருப்பது ஆகியவற்றிற்கு 50 மதிப்பெண்கள் வைத்து அவற்றிற்குக் கிடைத்த மதிப்பெண்களைத் தேர்வு மதிப்பிற் சேர்க்கலாம்.

9. இந்த ஆய்வில் அதிக மதிப்பெண்கள் பெறுபவர்களுக்குப் பிற பாடங்களில் மதிப்பெண் பெறுபவர்களுக்குப் பரிசுகள் வழங்குதல் போல் ஆண்டுதோறும் பரிசு வழங்கலாம்.

10. ஒவ்வொரு வகுப்பிலும், எந்தப் பிரிவு நூலகத் திட்டத்தை வெற்றிகரமாகச் செயல்படுத்துகிறதோ அந்த வகுப்புப் பிரிவுக்கு ஒவ்வொரு மாதமும் பொதுக் கூட்டத்தில் மதிப்புக்கொடி கொடுக்க லாம். ஆண்டுக்கொருமுறை வழங்கும் சுழற்கேடயமும் ஏற்படுத்தலாம்.

11. இத்திட்டம் வெற்றிகரமாக நடக்கப் பள்ளி நூலகத்திலுள்ள புத்தகங்கள் மாணவர்களுக்குத் தேவைப்படும்போது தங்குதடையின்றிக் கொடுக்கப்படவேண்டும்.

12. இதற்கு வகுப்பு மாணவத் தலைவர்களின் உதவியை அவ்வப்போது பெறலாம்.

13 ஒவ்வொரு மாணவ மாணவியரின் பிறந்த நாள் விழா சமயம் ஒவ்வொரு ஆண்டும் வற்புறுத்தல் இல்லாமல் ஒரு புதுப் புத்தகம் நூலகத்திற்குப் பரிசு அளிக்குமாறு செய்யலாம். நூலகத்தை விரிவு படுத்த இதுபோன்ற வழிகளை மேற்கொள்ளலாம்.

14. பள்ளி நூலகம் மாணவர்கள் புத்தகங்களை எடுப்பதற்கு வசதியாகத் தினமும் பள்ளி துவங்குவதற்கு முன் அரைமணி நேரமும் பள்ளி முடிந்த பின் ஒருமணி நேரமும் திறந்திருக்கவேண்டும்.

15. வாசகசாலையில் வரவழைக்கும் பத்திரிகைகளையும் வார, மாத இதழ்களையும் மாணவ மாணவியர் படிப்பதற்கு வேண்டிய வசதி ஏற்படுத்தவேண்டும்.

16. தினசரி பொதுக்கூட்டம் நடக்குமானல் அச்சமயம் தினச் செய்திகளைப் படிக்கலாம். இதற்கு வாரத்திற்கு ஒருமுறை ஒரு மாணவரையோ, அன்றி ஒரு மாணவக்குழுவையோ ஏற்படுத்தலாம். பொதுக்கூட்டம் நடக்க வசதியில்லாத பள்ளிகளில் தினச்செய்திகளைக் கரும்பலகைகளில் எழுதி வைக்கலாம்.

17. மாணவர் சங்கம் சரிவர இயங்குமானல் நூல்நிலையங்கள் அவர்களால் நன்கு பயன்படுத்தப்படும் எனவே சங்கங்களில் மாணவர்கள் பேசுவதற்கென்று நன்கு தேர்ந்த தலைப்புக்களைக் கொடுக்கவேண்டும். அத்தலைப்புகளுக்குத் தேவையான கருத்துக்கள் எந்தெந்தப் புத்தகங்களில் கிடைக்கும் என்பதையும் ஆசிரியர்கள் மாணவ மாணவியருக்கு அறிவிக்கவேண்டும். இதன்மூலம் அப்புத்தகங்களை அவர்கள் படிக்கும் வாய்ப்பை ஏற்படுத்தலாம். பாடம் நடத்துகையில்கூட ஆசிரியர்கள் மேற்கோள்களுக்காக நூல்நிலையத்திலுள்ள புத்தகங்களை அவ்வப்போது குறிப்பிடுவது நலம்.

18. பள்ளிகளில் விஞ்ஞானக் கழகம் (சயன்ஸ் கிளப்) இருப்பது போல் நூல்நிலையக் கழகம் (லைப்ரரி கிளப்) ஏற்படுத்தி இதில் மாணவர்கள் தாம் படித்த புத்தகங்களைப்பற்றிப் பேசவும், புத்தகங்களைப்பற்றிய கருத்துக்களைத் தெரிவிக்கவும் வாய்ப்பு அளிக்கலாம்.

19. ஒவ்வொரு வகுப்புப் பிரிவிலும் மாணவர் கைப்பிரதி மலர் கொண்டுவர உற்சாகப்படுத்தலாம். இதற்கு வேண்டிய கருத்துக்களை எடுக்க நூல்நிலையத்தைப் பயன்படுத்த மாணவ மாணவியரை ஊக்குவிக்கலாம். சிறந்த மலரை வெளியிடும் வகுப்புப் பிரிவுக்குப் பாராட்டு வழங்கலாம்.

20. இத்திட்டம் வெற்றிபெற ஆசிரியர்களின் ஆர்வமும், தலைமை ஆசிரியர்களின் உற்சாகமான ஊக்கமும் அவசியம். இவை அவர்களிடமிருந்து மிகுதியும் எதிர்பார்க்கப்படுகிறது.

21. திட்டத்தின் வெற்றிக்குத் தேவையான வகையில் பள்ளிகளில் அதற்கான விதிகளை பிரிவுபடுத்தி அமைத்துக்கொள்ளலாம்.

## உண்மை நகல்

## ந. க. 328 இ. 2/71 நாள் 25-10-1971

நகல் எல்லாப் பள்ளித் துணை ஆய்வர், உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர்களுக்கு அனுப்பலாயிற்று.

இத்திட்டம் இனிது நடைபெற்று வெற்றிகிட்ட ஆசிரியர்கள் அனைவரும் ஆர்வத்துடனும் உற்சாகத்துடனும் செயல்பட வேண்டப்படுகிறது. திட்டத்தின் வெற்றிக்கான வகையில் பள்ளிகளில் அதற்கான விதிகளை விரிவுபடுத்தி அமைத்துக்கொள்ளலாம். இத்திங்கள் 28ஆம் நாளுக்குள் இத்திட்டம் பற்றிய ஓர் அறிக்கையை இவ்வலுவலகத்திற்கு அனுப்புமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறது.

(ஒப்பம்) நெல்சன்

நடுநெல்லை மாவட்டக் கல்வி அலுவலர்க்காக.

# முதுபெரும் புலவர், கவியரசு,
# திரு. கு. நடேச கவுண்டர் பெரும் பிரிவு

தலைசிறந்த கவிஞரும், நல்லாசிரியரும், உரையாசிரியரும், தத்துவப் பேரறிஞரும் காலமெல்லாம் சைவத்திற்கும் தமிழுக்கும் உழைத்தவருமான கோவைக் கவியரசு நடேச கவுண்டர் அவர்கள் தமது 71 ஆம் அகவையில் 1972 மேத் திங்கள் 26 ஆம் நாள் கோயமுத்தூரில் இறையடி சேர்ந்தார்கள்.



கோவையில் கொங்கு வேளாள மரபில் தோன்றிய கவியரசு அவர்கள் தாமே தமிழ் பயின்ற பேராசிரியராவார். கோவை நகராட்சி உயர்பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற பின் திருப்பேரூர் சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரியிலும் திருச்செங்கோடு செந்திலாண்டவன் செந்தமிழ்க் கல்லூரியிலும் சில ஆண்டுகள் முதல்வராகப் பணியாற்றியுள்ளார்.

கவியரசு அவர்கள் தமிழ் இலக்கிய இலக்கணங்களிலும், சங்க நூல்களிலும், சைவத் திருமுறைகளிலும் சித்தாந்த சாத்திரங்களிலும் மிக வல்லுநர். 45 ஆண்டுகட்கு மேலாக நாடொறும் சிவபூசை செய்த பத்திமையாளர். பிள்ளைத்தமிழ், தூது, கலம்பகம் போன்ற பல சிற்றிலக்கிய நூல்களை மிக எளிதில் இயற்றும் ஆற்றல் வாய்ந்தவர்.

கவியரசு அவர்கட்குக் கழகத்தோடு நீண்டகாலத் தொடர்புண்டு. கழகத்தின் 1008 வது வெளியீட்டு விழா மலரில் சேக்கிழார் செய்யுள் திறன் பற்றிய சீரிய கட்டுரையும், கழகப் பொன்விழா மலரில் பாராட்டுக் கவிதையும் எழுதியுள்ளார்கள் என்பது குறிப்பிடத் தக்கது. கழகப் பொன்விழாவை யொட்டி நடைபெற்ற 'பெரிய புராணச் சொற்பொழிவு' மாநாட்டில் கலந்து கொண்டு அரிய உரையாற்றினர்கள்.

அண்மையில் 'டாக்டர் தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை, அவர்கள் பெயரில் கழகம் நிறுவியுள்ள 'திருமுறைப் பரிசுச் சொற்பொழிவு' வரிசையில் கவியரசு அவர்கள் 2-4-1972 இல் 'அப்பர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனும்' என்ற தலைப்பில் இரண்டாவது பரிசுச் சொற்பொழிவினை நிகழ்த்தினர்கள். அது நூல் வடிவில் அச்சாகி வெளிவரும் வேளையில் சென்னை மறைமலையடிகள் நூல்நிலையத்தின் இரண்டாவது மாடியில் "வள்ளலார் திருவருள் மண்டபம்" கட்டி முடிக்கும் நிலையில் இருந்தது. அதன் திறப்பு விழா நடைபெற்ற பின் பரிசுச் சொற்பொழிவை அம்மண்டபத்திலேயே நிகழ்த்தலாமெனக் கழக ஆட்சியாளர் தாமரைத்திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள் எண்ணினர். ஆனல், எதிர்பாராத வகையில் நான்கு திங்கட்கு மேலாக மண்டபத்திறப்பு விழா நிகழாது காலந்தாழ்த்தப் பெற்று 27-3-1972இல் மண்டபந் திறக்கப் பெறவும் 2-4-1972இல் பரிசுச் சொற்பொழிவு

நிகழ்த்தப் பெற்றது. இடையில் கவியரசு அவர்கள் கேட்டுக் கொண்டதன்படி பரிசுத் தொகை ரூபா ஐநூற்றில் ரூபா நானூறு மட்டும் சொற்பொழிவு நிகழ்த்துவதற்கு முன்பே அவர்கட்கு அனுப்பப் பெற்றது. கவியரசு அவர்கள் தமது பிரிவுக்கு முன்பே அச் சொற்பொழிவை நிகழ்த்தித் தமிழன்பர்கட்கு மகிழ்வூட்டச் செய்த திருவருளை எண்ணி வாழ்த்தி இறைஞ்சுகின்றோம். கவியரசு அவர்களின் ஆன்மா இறைவன் திருவடிநீழலில் இனிது ஒய்வுற அவன்தாள் வணங்குவோமாக !

---

## காஞ்சி மணிமொழியார் பிரிவு

முதல் இந்தி எதிர்ப்புப் போரில் முன்னணியில் நின்றவரும், திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்களுள் ஒருவருமாகிய காஞ்சி மணிமொழியார் அவர்கள் 1972 சூன் 7 ஆம் நாள் திடுமென மறைவுற்றார். 1937-38 இல் தமிழகத்தில் முதன்முதல் இந்தியைக் கட்டாயப் பாடமாக இராசாசி கொண்டு வந்தபொழுது அதை முன்னின்று எதிர்த்தவர்களில் காஞ்சி மணிமொழியாரும் ஒருவர். கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள் தமிழ்ப் பாதுகாப்புக் கழக வழி அறிக்கைகளும் துண்டு வெளியீடுகளும் அச்சிட்டுப் பரப்பி இந்தி எதிர்ப்பியக்கத்துக்கு அமைந் திருந்து பணிபுரிந்தார்கள். அவர் தம் நெருங்கிய நண்பரும், ஒத்த கருத்துடையவருமான திரு. காஞ்சி மணிமொழியாரவர்கள் ஊர்வலங்களை நடத்துவதிலும் மறியல்கள் செய்வதிலும் முன்னின்றார். அவர் தாம் முதல் இந்தி எதிர்ப்பு ஊர்வலத்தைச் சென்னைப் பவழக்காரத் தெருவிலிருந்து தொடங்கினார்.



காஞ்சியில் 1900 இல் தோன்றிய மணிமொழியார், பள்ளிக் கல்விக்குப்பின் தம் குடும்பத் தொழிலான துணி வாணிகத்தில் ஈடுபட்டார். பின் சில ஆண்டுகள் வாலாசாபாத்திலும் காஞ்சி பச்சையப்பன் பள்ளியிலும் தமிழாசிரியராகப் பணியாற்றினார்.

நீதிக் கட்சியில் ஈடுபட்டு ஆசிரியர் பணியைக் கைவிட்டார். முதல் இந்தி எதிர்ப்புப் போரிலும் 1948 இந்தி எதிர்ப்புப் போரிலும் முன்னின்று தமிழுக்காக இருமுறை சிறை சென்றார். திராவிடர் கழகத்திலிருந்து பிரிந்து திராவிட முன்னேற்றக் கழகம் தோன்றியகாலை அதில் சேர்ந்து அதன் கொள்கைகளைப் பரப்புவதற்காகப் 'போர் வாள்' என்ற வார ஏட்டைச் சிறப்பாக நடத்திவந்தார். பின்னர்த் தி. மு. கழகம் நடத்திய பல போராட்டங்களில் கலந்து கொண்டார். தமிழக சட்டமன்றத்தின் உறுப்பினராக 1962 முதல் ஐந்தாண்டுக் காலம் அருந்தொண்டாற்றினார். பிற்காலத்தில் காஞ்சி மணிமொழியார் தமிழ்க் கல்லூரியை நிறுவித் தமிழ் பயில்வார்க்குப் பெருந்துணையாக விருந்தார்.

---

# திருப்பனந்தாள் ஆதீனத் தலைவரின் பேராவியற்கை

காசிமடத் தலைவராகச் சிறந்துவிளங்கிச் சைவத்திற்கும் தமிழுக்கும் பெருந்தொண்டாற்றி வந்த திருவருட்டிரு காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் 18-5-72 அன்று அம்மையம்பலவாணரின் இணையடி நீழலையடைந்தனர். அன்பும் அருளும் ஒருருக் கொண்டது போன்ற அடக்கமான தோற்றம் - என்றும் பணியுமாம் பெருமை என்பதற்கோர் இலக்கியமாகத் திகழ்ந்த பணிவுடைப் பண்பு - வந்தோரை இன்முகத்துடன் வரவேற்றுச் சமவிருக்கை தந்து அமரச் செய்து உரையாடிய உயர்ந்த உள்ளம் ஆகிய இவைதாம் அருணந்தித் தம்பிரான் அவர்களை எண்ணிப் பார்க்கும்போது இயல்பாக எழும் நினைவுகள்.

திக்கெலாம் புகழும் திருநெல்வேலி மாவட்டத்தில் 1899 செப்டம்பர் 13 ஆம் நாள் தம்பிரான் அவர்கள் தோன்றினார்கள். இளமையிலேயே சமயப் பற்றும் சைவத் திருமுறைகளில் பேரீடுபாடும் கொண்டு விளங்கிய அடிகளார், அறவழி காட்டும் ஆசிரியனைத் தேடித் திருக்கோயில்களுள்ள பதிகள்தோறும் சென்று வழிபட்டு வந்தார். ஞானத் தந்தையை நாடி அலைந்த அடிகளார் திருவாவடுதுறை ஆதீனத்தை முதற்கண் அடைந்தார். இறுதியாகத் தருமபுர ஆதீனத்தை அடைந்து 23வது பட்டத்தில் எழுந்தருளியிருந்த திருவருட்டிரு சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த சுவாமிகளிடம் அருளொளி பெற்றார். அவர்தம் அருள்நிறை ஆசியுடன் 1944 இல் அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் திருப்பனந்தாளிலுள்ள காசி மடத்தின் தலைவரானார்.

ஆதீனத்தலைமையேற்ற அடிகளார் சமயத் தொண்டிலும் தமிழ்த் தொண்டிலும் தம்மைப் பெரிதும் ஈடுபடுத்திக் கொண்டார். அவர்தம் அருளாட்சி நடைபெற்ற 28 ஆண்டுக் காலத்தில் ஐந்நூற்றுக்கு மேற்பட்ட அறக்கட்டளைகளை நிறுவியுள்ளனர். அவற்றுக்காக ஒரு கோடி ரூபாய் வரை ஒதுக்கியுள்ளார். இதில் முப்பது இலட்சம் ரூபாய்க்கு மேல் மாணவர்கள் சமய இலக்கியத்திலும் தமிழ் இலக்கியத்திலும் புலமை பெறும் வகையில் பலவகையான கட்டளைகளை நிறுவியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

சைவ சமயத்தின் சாரமான சித்தாந்த தத்துவத்தைப் பரப்புவதற்கு அடிகளார் மேற்கொண்ட முயற்சி சைவமக்களால் என்றென்றும் போற்றப்பெறும். வடநாட்டில் சைவசித்தாந்தத்தைப் பரப்புவதற்காகக் காசி இந்துப் பல்கலைக் கழகத்தில் தனித்துறையொன்றை நிறுவுதற்கு நன்கொடையளித்தார். சிறந்த சமயப் பேரறிஞர்களைக் கொண்டு

ஆண்டுதோறும் அப் பல்கலைக் கழகத்தில் அறக் கட்டளைச் சொற் பொழிவுகள் நிகழ்த்துவதற்கும் அடிகளார் நிதி உதவியுள்ளார்.

தமிழ்மொழி வளர்ச்சிக்காகத் திருப்பனந்தாளில் தமிழ்க் கல்லூரி யொன்றை அடிகளார் நிறுவியுள்ளனர்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் தொண்டுகளை அடிகளார் எப்பொழுதும் பாராட்டுவதுண்டு. அடிகளார் ஆதீனத் தலைவராகப் பொறுப்பேற்பதற்கு முன்னரே கழகம் திருப்பனந்தாள் ஆதீனத்தின் பொருளுதவியோடு வெள்ளகால் ப. சுப்பிரமணிய முதலியார் அவர்களின் 'கம்பராமாயண சார'த்தை அச்சிட்டு வந்தது. அடிகளார் தலைமை யேற்ற சமயம் யுத்தகாண்ட மட்டும் வெளிவர வேண்டியிருந்தது. அதற்கு அடிகளாரவர்கள் உடனே பொருளுதவி செய்ய விரும்பவில்லை யாயினும் முன் வெளிவந்த முதல் ஐந்து காண்டங்கள் ஒவ்வொன்றிலும் கழகம் ஆதீனத்திற்கெனக் கொடுத்திருந்த 500 படிகளில் 250 படிகளை மட்டுங் கழகத்தாரிடமே திரும்பக் கொடுத்து அவற்றை விற்று அதிலிருந்து கிடைக்கும் தொகையிலிருந்து யுத்த காண்டத்தை அச்சிட்டு வெளியிடுமாறு பணித்தனர்.

இவ்வாறு தமிழர்தம் தவப் பயனுல் தோன்றி அரும் பெரும் பணியாற்றிய அடிகளார் மறைவுற்றது தமிழுலகுக்கும் சைவப் பெருமக்களுக்கும் ஈடு செய்ய முடியாத பேரிழப்பாகும். அடிகளார்தம் பொன்னுடல் அவர்தம் விருப்பப்படியே புனிதக் கங்கையாற்றில் இடப் பட்டு ஐம்பூதங்களில் ஒன்ருன * நீரில் அடக்கம் செய்யப்பெற்றது. இம்முறைப்படி ஐம்பூதங்களோடு இரண்டறக் கலந்த அடிகளாரின் புகழ் என்றும் நின்று நிலவுமாக.

---

## நீரிலிடுதலை 'ஜல சமாதி' என்பானேன் ?

* இறந்தவர் உடலை நிலத்திலிடுதல் (புதைத்தல்), நீரிலிடுதல் (மிதக்க விடுதல்), நெருப்பிலிடுதல் (எரியூட்டுதல்) ஆகிய மூன்று வகை யில் அடக்கஞ் செய்வதாகும். நிலத்திலிடுதலும் நெருப்பிலிடுதலும் யாவராலும் பெரும்பான்மை கடைப்பிடிக்கப்படும் முறை. நீரிலிடுதல் கங்கையில் மட்டும் நிகழ்வதாகும். நிலம், நீர், நெருப்பு ஆகிய மூன்று சொற்களும் அடுத்தடுத்த வரிசையில் அமைந்திருப்பது தமிழ்மொழியின் தனிச்சிறப்பை உணர்த்துகின்றது. 'நிலம் நீர், நெருப்பு, வளி, வான் ஆனுன்கண்டாய்' என்று திருமுறை ஓதும்போது நீரிலிடுதலை 'ஜல சமாதி' என்று சொல்வானேன்! எங்ஙனமெல்லாம் தண்டமிழ்ச் சொற்கள் பல வீழ்த்தப்பெற்று வடசொற்கள் புகுத்தப்பட்டிருக் கின்றன! உணர்மின்கள் அறிஞர் பெருமக்களே!

## வாகீச கலாநிதி கி. வா. ஜகந்நாதனும் 'பத்மஶ்ரீ'யும்

"பத்மஶ்ரீ யைத் தாமரைத்திரு என்று மொழி பெயர்ப்பது அவசிய மற்றது. 'பத்மஶ்ரீ' என்று போட்டுக் கொண்டால் தமிழ்ச்சுவை கெட்டுவிடுகிறதா? அல்லது தமிழபிமானந்தான் குறைந்து விடுகிறதா? வடமொழியை எதிர்க்கிற மனோபாவந்தான் இந்த மொழிபெயர்ப்பில் தெரிகிறது" என்று திரு ஜகந்நாதனவர்கள் 21-5-1972 ஆனந்தவிகடன் இதழில் எழுதியுள்ளனர்.

நடுவணரசு அனைத்திந்தியப் பாங்கில் 'பத்மஶ்ரீ' என்ற பட்டம் வழங்கியதும் அதனைத் தமிழ் மகன் ஒருவன் பெற்றதும் சரியே. ஆனால் அதனைத் தமிழகத்திலே தமிழ்மக்கள் பொருள் தெரிந்து சுவை காணும் வகையில் 'தாமரைத்திரு' என்று வழங்குவதில் என்ன தவறு?

திருவரங்கம், திருவில்லிபுத்தூர் என்ற ஊர்ப்பெயர்களை ஶ்ரீரங்கம், ஶ்ரீவில்லிபுத்தூர் என்று மாற்றி வழங்குமாறு செய்தது யார்? மயிலாடு துறை, பழமலை, குடமூக்கு என்ற தூய திருவூர்ப் பெயர்களை மாயவரம், விருத்தாசலம், கும்பகோணம் என்று மாற்றி வழங்கியது யார்? இவற்றைப் பற்றி நஞ் செஞ்சொற் கலைச்செல்வர் திரு உலகப்பனார் வருந்துகிறார்களில்லையே!

ஆகாஷ்வாணி, சென்னை இராஜ்யம், பீச்சு, போர்டு, பார்க் என்ற பெயர்களை வானொலி, தமிழ்நாடு, கடற்கரை, கோட்டை, பூங்கா என மாற்றுவதற்கு எத்துணை எதிர்ப்பு இவர் தமது இல்லத் திருமண அழைப்பிதழில் 'விவாஹ சுப முகூர்த்தப் பத்திரிகை' என்று அச்சிடு வதையே பெருமையாகக் கொள்கின்றனர்.

இவர்தம் இலக்கிய ஆசிரியர் முதுபெரும் புலவர் டாக்டர் சாமி நாதையர் 'வடமொழி சம்பந்தத்தால் தமிழ் அதிக இனிமை பெற்றிருக் கிறதென்பது பெரியோர் கொள்கை' என்று கூறியதும், இவர்தம் குலகுரு காஞ்சி சங்கராச்சாரியார் 'தமிழை நீச்ச பாஷை' என்று கூறிய தும் இவருக்கு இனிப்பாயிருக்கின்றனவே.

இத்தகைய தமிழ் உள்ளம் படைத்தவருக்குத்தான் தமிழகத்திலே திருமடங்கள், திருக்கோயில்கள், தமிழ் மேடைகள், சமய மேடைகள் ஆகியவற்றிலெல்லாம் வரவேற்பு'!

**வாழ்க தமிழகம்!**

# சென்னைப் பல்கலைக் கழக
# முதல் அனைத்திந்தியத் திருக்குறள்
# ஆராய்ச்சிக் கருத்தரங்கு

பல்கலைக் கழக மானியக் குழுவின் உதவியுடன் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை **முதல் அனைத்திந்தியத் திருக்குறள் ஆராய்ச்சிக் கருத்தரங்கை** 1972 மே 27, 28, 29 ஆகிய மூன்று நாட்களிலும் மிகச் சிறப்பாக நடத்தியது. இக்கருத்தரங்கில் அசாமி, வங்காளம், குசராத்தி, இந்தி, கன்னடம், மலையாளம், மராத்தி, மைதிலி, பஞ்சாபி, சமக்கிருதம், தெலுங்கு, உருது ஆகிய பன்னிரு மொழிகளைச் சேர்ந்த பேராசிரியர்களும் கலந்துகொண்டு உரை நிகழ்த்தியது பெருஞ் சிறப்பாகும்.

இக்கருத்தரங்கின் தொடக்கவிழா 27-5-1972 அன்று சென்னைப் பல்கலைக் கழகத் தேர்வு மண்டபத்தில் நடைபெற்றது. தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் துவக்கி வைத்தார்கள். இவ் விழாவில் சிலம்புச்செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்கள் புதிய நூலை வெளியிட்டார். துணைவேந்தர் தாமரைச் செல்வர் நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் சிறப்புரையாற்றினார்கள். பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் அனைவரையும் வரவேற்கத் திருக்குறள் ஆராய்ச்சித் துறைத் தலைவர் திரு க. த. திருநாவுக்கரசு அவர்கள் கருத்தரங்கிலே கலந்து கொள்ள வந்த பிறமொழியாளர்களை அறிமுகப்படுத்தி வைத்தார்.

கருத்தரங்கு 28, 29 ஆகிய இரு நாட்களிலும் பல்கலைக் கழக நூற்றுண்டு விழாக் கட்டிடத்தில் நடைபெற்றது. கருத்தரங்கு நான்கு பிரிவாக நடைபெற்றது. நான்கு பிரிவுகளுக்கும் முறையே பேராசிரியர் பூ. ஆலாலசுந்தரனுர், டாக்டர் வ. சுப. மாணிக்கம், பேரா. அ. ச. ஞானசம்பந்தம், டாக்டர் ஆர். கே. சேத் ஆகியோர் தலைமை தாங்கினர்.

திருக்குறளிலுள்ள நீதிக் கருத்துக்களையும் தத்தம் மொழி இலக்கியங்களிலுள்ள நீதிக் கருத்துக்களையும் ஒப்பிட்டுப் பிறமொழியாளர் பன்னிருவர் ஆராய்ச்சிக் கட்டுரைகளைப் படித்தனர். அதைத் தொடர்ந்து கருத்தரங்குப் பேராளர்கள் எழுப்பிய வினுக்களுக்கும் அவர்கள் விடையளித்தனர். ‘எல்லாப் பொருளும் இதன் பாலுள, என்பதற்கேற்பத் திருக்குறளில் எல்லா நீதிக் கருத்துக்களும் இடம் பெற்றிருப்பது போலத் தம்முடைய மொழிகளில் எந்த நூலிலும் இவ்வளவு கருத்துக்கள் ஒரு சேரக் கூறப்படவில்லை என்பதை அந்தப் பிறமொழியாளர் உணர்ந்து கூறினர். குறளில் கூறப்பட்டுள்ள

எல்லாக் கருத்துக்களும் தம்முடைய மொழிகளில் கூறப்படவில்லை என்பதையும் அவர்கள் உணர்ந்தனர்.

**கருத்தரங்கில் ஆராய்ச்சிக் கட்டுரை படித்தோர் :**

அசாமி - டாக்டர் உ. கோசுவாமி (சவுகாதி பல்கலைக் கழகம், அசாம்) வங்காளம் - டாக்டர் அமிதா தாஸ் அம்மையார் ; குசராத்தி - டாக்டர் ஆர். சி. ஷா (பம்பாய்ப் பல்கலைக் கழகம்) ; இந்தி - டாக்டர் ஆர். சேத் (தில்லிப் பல்கலைக் கழகம்) ; கன்னடம் - பேரா. எம். எம். பட் (மைசூர்); மலையாளம் - டாக்டர் கே. எம். ஜார்ஜ் ; மராத்தி - சிரிபாதசோதி (பூனா); மைதிலி - டாக்டர் சுபத்ரா ஜா (ராஞ்சி) பஞ்சாபி - டாக்டர் அர்னும் சிங் சான் (பஞ்சாப் பல்கலைக்கழகம்) ; தெலுங்கு - வேதம் வெங்கடராய சாஸ்திரி ; உருது - திரு எச். கே. காஸி, ஐ. ஏ. எஸ். (சென்னை)

இக் கருத்தரங்கில் தாமரைத் திரு நெ. து. சுந்தரவடிவேலு அவர் களைத் தலைவராகக் கொண்ட 'அனைத்திந்தியத் திருக்குறள் ஆராய்ச்சி மன்றம்' ஒன்றும் அமைக்கப் பெற்றது. திருக்குறளைப் பிறமொழிகளில் மொழி பெயர்ப்பதற்கும் திருக்குறள் கருத்துக்களை இந்தியா முழுவதும் பரப்புவதற்கும் இம் மன்றம் பெருமுயற்சி எடுத்துக் கொள்ளும்.

பல்கலைக்கழகத்தார் வேண்டுகோட்கிணங்கி, இதுகாறும் திருக் குறள் பற்றி வெளிவந்துள்ள 650க்கு மேற்பட்ட அரிய நூல்களின் காட்சி யொன்றினைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் அக் கருத் தரங்குக் கூடத்திலேயே அமைத்திருந்தது. இதில் பல மொழிகளிலுள்ள குறள் மொழி பெயர்ப்புக்கள், மூல நூல்கள், பல்வேறு உரைகள், தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளிவந்துள்ள ஆராய்ச்சி நூல்கள், திருக் குறள் பரிசுப் பதிப்புக்கள், திருவள்ளுவர் மலர்கள், குறள் நூலாசிரியர் களின் படங்கள் ஆகியவை இடம் பெற்றிருந்தன. இக் காட்சியைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்களும் கருத்தரங்கப் பேராளர்களும் பொது மக்களும் கண்டு களிப்புற்றுப் பாராட்டினர்.

———

பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தொறுஞ் சேரச்—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்
வல்லாரார் வள்ளுவரல் லால்.

—அரிசில் கிழார்

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## திருக்குறள் ஆய்வு மாநாடு

சென்னை, கிறித்தவக் கலை - தொடர்பு நிலையத்தின் இயக்குநரான அருட்டிரு சா. சுவிசேட முத்து அவர்கள் புலவர் மு. தெய்வநாயகம் இயற்றிய 'ஐந்தவித்தான் யார்?' 'வான் எது?' 'நீத்தார் யார்?' 'எழு பிறப்பு சான்றோர் யார்?' 'திருவள்ளுவர் கிறித்தவரா?' என்ற ஆறு நூல்களையும் ஆயும் வகையில் 'திருக்குறள் ஆய்வு மாநாட்டை' 1972 மே 3, 4 ஆம் நாட்களில் நடத்தினர். இம் மாநாட்டிற்கு மொழிநூல் மூதறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள் தலைமை தாங்கினார்கள். தவத்திரு குன்றக்குடி அடிகளார், அழகரடிகளார், அப்பாத்துரையார், டாக்டர் மெ. சுந்தரம், புலவர் குழந்தை, டாக்டர் வ. சுப. மாணிக்கம் ஆகிய அறுவர் தலைமையில் ஆறு அணிகள் அமைக்கப்பட்டு, ஒவ்வோர் அணியிலும் ஒவ்வொரு நூலைத் தனித்தனியே ஆய்ந்தன. ஒவ்வோர் அணியிலும் ஐவர் கருத்துரை வழங்கினர்.

இங்ஙனம் முப்பது தமிழ்ப் பேரறிஞர்களும் ஆறு அணித்தலைவர்களும் கூடி நூலாசிரியர் கூற்றுக்களை ஏற்றும் எதிர்த்தும் வாதிட்டனர். இறுதியாகப் பாவாணர் அவர்கள் 'வள்ளுவர் கிறித்துவுக்கு முற்பட்டவர்' என்ற கருத்தை ஏற்றுக் கொண்டால் இந்நூலாசிரியர் கருத்துக்களை எளிதில் மறுத்து விடலாம் என்றும் அவ்வாறில்லாவிடினும் வள்ளுவர் காலத்தில் கிறித்து சமயம் தமிழ்நாட்டில் பரவியிருந்ததற்குச் சான்றுகள் இல்லை என்றும் கூறினர். மாநாட்டையொட்டிக் குறள் பழைய உரைகள், மொழி பெயர்ப்பு நூல்கள் ஆகியவற்றின் காட்சியொன்றைச் சை.சி. கழகம் அமைத்திருந்தது குறிப்பிடத்தக்கது.

## தொல்பொருள் ஆய்வுத்துறை விழா

தொல்பொருள் ஆய்வுத்துறையில் கல்வெட்டுப் பயிற்சி நிறைவு பெற்றோர்க்குச் சான்றிதழ் வழங்கு விழாவும், கல்வெட்டுப் பயிற்சி நிறைவு விழாவும் 22—5—72 இல் சென்னை இராசாசிமண்டபத்தில் நடைபெற்றது. விழாவுக்குத் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் கருணாநிதியவர்கள் தலைமை தாங்கினார்கள். அறநிலையத்துறை அமைச்சர் கண்ணப்பன், மேலவைத்துணைத் தலைவர் ம. பொ. சி. ஆகியோர் சொற்பொழிவாற்றினர். தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் திரு. நாகசாமி வரவேற்புரை நிகழ்த்தினர்.

"தமிழ் நாட்டுக் கலைகள்" என்னும் ஆங்கிலப் புத்தகத்தை முதல்வர் கலைஞர் வெளியிட்டார். "குமரி மாவட்டக் கல்வெட்டுக்கள்" என்னும் தமிழ்நூலை அறநிலையத்துறை அமைச்சர் மு. கண்ணப்பன் அவர்கள் வெளியிட்டார்.

கல்வெட்டுப்பயிற்சியில் நிறைவு பெற்ற காவல்துறை துணைக் கண்காணிப்பாளர் ஒருவர் உட்பட மாணவ மாணவிகளுக்கு முதல்வர் கலைஞர் நற்சான்றிதழ்கள் வழங்கினூர்.

முதல்வர் கலைஞர் அவர்கள் தமது தலைமை உரையில்,

"தமிழகத்தின் வரலாறு தெளிவாகவும், முழுமையாகவும் எழுதப் படவேண்டியது அவசியம். இந்த இலக்கியப் பணி நமது காலத்திலேயே முடிந்திடவேண்டும். அஃதாவது நீண்ட இடை வெளிக்குப் பிறகு தமிழ் - தமிழர் - தமிழ்ப் பண்பாடு ஆகியவற்றைக் காக்கும் உணர்ச்சி ஏற்பட்டுள்ள காலத்தைச் சொல்லுகிறேன் என்று குறிப்பிட்டார்.

நடனகாசிநாதன் நன்றி கூற விழா இனிது முடிந்தது.

## இலங்கைத் தமிழர் நிலை

22—5—72 இல் பிரிட்டிஷ் அரசுடன் தனக்கிருந்த 157 ஆண்டுக் கால உறவைத் துண்டித்துக்கொண்டு தனிக்குடியரசு நாடாகியது. புதிய அரசியல் ஆவணப்படி ஸ்ரீமாவோ பண்டாரநாயகா குடியரசின் முதல் தலைமை அமைச்சராகவும் வில்லியம் கோபல்வா முதல் குடியரசுத் தலைவராகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

இங்ஙனம் புத்தாட்சிப்பொறுப்பினை ஏற்றுக் கொண்டிருக்கும் இலங்கை. அரசியலில் தமிழருக்குரிய சுதந்திரம் அளிக்கப்படவில்லை எனத் தமிழரசுக் கட்சியும் தமிழர் காங்கிசுரம் விடுதலை விழாவில் கலந்து கொள்ளவில்லை. தமிழர் வாழும் பகுதிகளில் அந்நாள் துக்கநாளாகக் கடைப்பிடிக்கப்பட்டது.

இலங்கையின் வளத்திற்கும் வாழ்விற்கும் வழிகோரிய தமிழினம் இங்ஙனம் அரசியலில் உரிமை இழந்து வாழவேண்டிய நிலை வருந்தத் தக்கதே.

## போப்பாண்டவருக்குத் திருக்குறள் பரிசு

தமிழகத்தில் புகழ்பெற்ற வணிகர்களான வி. ஜி. பன்னீர்தாஸ் உடன்பிறப்பாளருள் இளையவரான திரு. வி. ஜி. சந்தோசம் அவர்கள் அண்மையில் அயல் நாடுகளில் சுற்றுப்பயணம் செய்தபோது ரோம்நகர் சென்று போப்பாண்டவரைக் கண்டார். அப்போது போப்பாண்டவருக்குச் சந்தனமாலையணிவித்து டாக்டர் போப் திருக்குறள் நூலினையும் வழங்கினூர்.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ சுப்பையா.

# கழகப் புதிய வெளியீடுகள்

## திருப்போரூர் முருகன் பிள்ளைத்தமிழ்

விளக்கவுரை : சு. அ. இராமசாமிப் புலவர்

தவத்திரு சிதம்பர அடிகள் அருளிய திருப்போரூர் முருகன் பிள்ளைத்தமிழ் சொற்சுவை பொருட்சுவை கற்பனை வளங்கள் நிரம்பியது. மாணவர் கற்றுப் பயன்பெறத்தக்க பிள்ளைத்தமிழ் நூல்களுள் இதுவும் ஒன்று. பொழிப்புரை விளக்கங்களுடன் கூடியது. விலை ரூ. 3 00

## வங்கத்துப்பரணி

ஆசிரியர் : அருட்கவி சீனிவாசன்

இந்நூல் இந்தியா—பாக்கித்தான் போர்பற்றியும், போர்க்களக் காட்சி—பாக்கித்தான் ஆட்சியில் வங்கதேசம் பட்டபாடுகள் — பின்னர் வங்கம் விடுதலைபெற்ற செய்தி—பாக்கித்தானின் தோல்வி இன்ன பிறவற்றைப் படிப்போர்க்கு உணர்ச்சி யூட்டும்வகையில், பாடப்பட்டிருக்கும் பரணியாகும். கற்பனைவளம், கவிதைச்சிறப்பு ஆகியவை பாராட்டத்தக்கவை. விலை ரூ. 3 00

# விரைவில் வெளிவரும் புதிய வெளியீடுகள்

## கம்பராமாயணம்—சுந்தரகாண்டம் (1-3 படலங்கள்)

உரையாசிரியர் : ம. இராசமாணிக்கம், எம்.ஏ.

சென்னைப் பல்கலைக்கழகம் வித்துவான் இறுதிநிலைக்குப் பாடமாக வைத்திருக்கும்,கம்பராமாயணத்தின் இப்பகுதிசுவைமிக்கதோர் இலக்கிய மாகும். பதவுரை விளக்க உரைகளுடன் கூடியது விலை ரூ 5 00

## இரட்சணிய யாத்திரிகம்—சிலுவைப்பாடு (1-50 பாடல்கள்)

உரை : பேராசிரியர் வீ. பா. க. சுந்தரம்

இயேசுபிரான் வரலாற்றில், அவர் சிலுவையில் அறையப்பட்டும், பிற கொடுமைகட்கு ஆளாகியும் படும் இன்னல்களை இனிய பாக்களால் கூறும் இப்பகுதி, வித்துவான் இறுதிநிலைக்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளது. விலை ரூ. 2 00

## கந்தபுராணம்—அவைபுகு படலம் (வீரவாகுதேவர் தூது)

உரை : புலவர் இரா. இளங்குமரன்

கந்தபுராணம் கற்பனை வளமும் செய்யுள் நயமும் வாய்ந்த நல்லதோர் இலக்கியம். இதில் வீரபன்மன் அவைக்குச் சென்ற வீரவாகுதேவர் தூதுரைக்கும் பகுதி சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் முதனிலைக்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளது. சீரிய பொழிப்புரை, விளக்கவுரைகளுடன் கூடியது. விலை ரூ. 2 00

## பெருமாள் திருமொழி (1-50 பாடல்கள்)

குலசேகர ஆழ்வார் அருளிச்செய்த பெருமாள் திருமொழி சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் இறுதிநிலைக்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளது. பொழிப்புரை விளக்கங்களுடன் கூடியது. விலை ரூ. 1 00

பதிவு எண்: M. 4899

# வெளியார் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| எனது நாடக வாழ்க்கை — அவ்வை சண்முகம் | 12 | 00 |
| பிற்காலச் சோழர் வரலாறு —தி. வை. சதாசிவ பண்டாரத்தார் | 3 | 00 |
| உலகத்தமிழ் —நெ. து. சுந்தரவடிவேலு | 2 | 00 |
| சோழர்கால அரசியல் தலைவர்கள் —கா. ம. வேங்கடராமையா | 3 | 00 |
| திருமலை நாயகர் —ஆறு. அழகப்பன் | 6 | 00 |
| வண்ணத்தோகை —கா. வேழவேந்தன் | 6 | 00 |
| இலக்கிய விளக்கம் —டாக்டர் வ. சுப. மாணிக்கம் | 3 | 00 |
| சமுதாய வீதி —நா. பார்த்தசாரதி | 5 | 75 |
| பஞ்சகல்யாணி —பி. வி. ஆர். | 3 | 50 |
| அறிவுரையமுது —திருமுருக கிருபானந்தவாரியார் | 0 | 50 |
| வாரியார் விரிவுரை விருந்து —திருமுருக கிருபானந்தவாரியார் | 5 | 00 |
| இளையராணி —சாண்டில்யன் | 3 | 00 |
| Thiruvalluvar and Kabir (in Hindi) —by Dr. R. K. Seth | 30 | 00 |
| A New Approach to Tiruvachagam —Mrs. Ratna Navaratnam M.A., M.Litt., M.Ed. | 7 | 00 |
| Ramalinga Swami —Dr. C. Srinivasan | 6 | 00 |
| Voice of Valluvar —S. R. V. Arasu | 3 | 00 |

அப்பர் அச்சகம், சென்னை-1.